உ

சிவ சிவ

குன்றக்குடி - திருவண்ணாமலை ஆதீனக்குருமுதல்வர்

திருவருள்திரு

தெய்வசிகாமணி தேசிக பரமாசாரிய சுவாமிகள் மீது

அருட்டிரு குமாரசாமித்தம்பிரான்

இயற்றியருளிய

# ஸ்ரீ தெய்வசிகாமணி நான்மணிமாலை

குறிப்புரை :

வித்துவான் க. கதிரேசன் எம்.ஏ., பி.எட்.,

(தமிழாசிரியர், (ஓய்வு) த. க. கு. மேல்நிலைப்பள்ளி, குன்றக்குடி)

ஆதீனப்புலவர், குன்றக்குடி - திருவண்ணாமலை ஆதீனம்.





வெளியீடு :

சிவநெறிப்புரவலர்

சிவத்திரு ப. மூக்கப்பிள்ளை அவர்கள்

61, நடுத்தெரு, வரகனேரி, திருச்சிராப்பள்ளி - 8.

''இந்த நான்மணிமாலை, சிவாகமக் கருத்துக்களும், சித்தாந்த உண்மைகளும் பொதுளும் சிறந்த தத்துவ நூல். இலக்கியம்.

வாழ்க்கை என்பது நம்பிக்கையின்பாற்பட்டது. 'உண்டு', 'இல்லை' என்ற விவாதம் அன்றும் இருந்திருக்கிறது. 'அருள் உண்டு எனில் உண்டு' என்கிறார் ஆசிரியர். அருளும், அறமும் பொருள் உண்டெனில் உண்டு. அறம், பொருள், இன்பம்: நடுவணது எய்த இருதலையும் எய்தும் என்னும் கருத்து ஒப்புநோக்கத்தக்கது.

அருளும் அறமும், பொருளும் உள்ள உலகில் மல இருளும் உண்டு. பொருள் ஆன்மாவைப் பொருத்து இருள்மலமாகவும் ஒளிமயமாகவும் செயற் படும். ஆதலால் இந்த உலகில் இருளும் உண்டு.

இருள்மலத்தால் வரும், துன்பத்தினைத் தடுத்து நிறுத்த, தேவசிகாமணி தேசிகரின் ஞானம் உண்டு என்று இந்நூலாசிரியர் குமாரசாமி முனிவர் கூறுவது சிந்தனைக்குரிய பகுதி; செயலாக்கத்திற்குரியது.

— 45-வது குருமகாசந்நிதானம்,

திருவருள்திரு தெய்வசிகாமணி அருணாசல தேசிக பரமாசாரிய சுவாமிகள்.

(தவத்திரு குன்றக்குடி அடிகளார் அவர்கள்)

குன்றக்குடி – திருவண்ணாமலை

ஆதீனக் குரு முதல்வர்

**திருவருள் திரு தெய்வசிகாமணி தேசிக சுவாமிகள்**

மீது

அருட்டிரு குமாரசாமித் தம்பிரான்

இயற்றியருளிய

# ஸ்ரீ தெய்வசிகாமணி நான்மணி மாலை




குறிப்புரை:


வித்துவான் **க. கதிரேசன்** எம்.ஏ., பி.எட்.,

(தமிழாசிரியர் (ஓய்வு) த.க.கு. மேல்நிலைப்பள்ளி, குன்றக்குடி)

ஆதீனப்புலவர், குன்றக்குடி – திருவண்ணாமலை ஆதீனம்.



வெளியீடு:

சிவநெறிப் புரவலர்

சிவத்திரு. **ப. மூக்கப்பிள்ளை** அவர்கள்

61, நடுத்தெரு, வரகனேரி,

திருச்சிராப்பள்ளி – 620 008.

# ஸ்ரீதெய்வசிகாமணி நான்மணிமாலை

## உள்ளுறை

பக்கம்

# பதிப்புரை

வித்துவான் மு. வைத்தியநாதன், திருச்சிராப்பள்ளி.

தமிழகத்துச் சுத்தாத்துவித சைவசித்தாந்தத் திருமடங்கள் பதினெட்டனுள் ஒன்று, குன்றக்குடி – திருவண்ணாமலை ஆதீனம். அவ்ஆதீனத்தை, திருவண்ணாமலையில், திருக்கோயில் கொண்டுள்ள, அருள்மிகு அண்ணாமலை அண்ணலுக்கு, நாள் வழிபாடும், சிறப்பு வழிபாடுகளும் செய்துவந்த, ஆதி சைவமரபினரா்கிய, அருள்திரு தெய்வசிகாமணி தேசிகர் அவர்கள், அண்ணாமலை நகரில், பதிநான்காம் நூற்றாண்டில் நிறுவியருளினார்கள்.

அக்காலம் முதல் ஆதீனத்தலைவர்கள் முறையே திருவண்ணா மலையிலும், திருக்கொடுங்குன்றத்திலும், குன்றக்குடியிலுமாக எழுந் தருளியிருந்து அருளாட்சி புரிந்து வருகிறார்கள்.

குன்றக்குடி ஆதீனம், சிவாகமங்களையும் செந்தமிழையும் இருகண்கள் எனப்போற்றிவருகிறது; சமய, சமுதாயப்பணிகள் செய்து வருகிறது; குன்றக்குடி ஆதீனக் குரு முதல்வர் அருள்திரு தெய்வசிகாமணி தேசிக சுவாமிகள் மீது, அவ்ஆதீனத்து அடியவர் திருக்கூட்டத்து, அடியவர்களில் ஒருவரும், சித்தாந்தச் செம்மலும், இரு மொழிப்புலமையாளருமாகிய ஸ்ரீமத் குமாரசாமித் தம்பிரான் அவர்கள் ஸ்ரீதெய்வசிகாமணி தேசிகர் நான்மணிமாலை என்னும் அரிய, சித்தாந்தச் செம்பொருள் நூலை செம்மாந்த புலமைத் திறம் வெளிப் பட இயற்றியருளியுள்ளார்கள். அது ஒரு குருதோத்திர நூலாயினும், சைவசித்தாந்த செம்பொருட்களஞ்சியமாகவுள்ளது.

'ஸ்ரீ தெய்வசிகாமணி தேசிகர் நான்மணிமாலை' 1887 (சர்வசித்து – வைகாசி) ஆம் ஆண்டு, அரும்பத்வுரையுடன் முதற் பதிப்பாக வெளிவந்துள்ளது. இரண்டாம் பதிப்பு, 8–9 – 1987–இல், கவிஞர் மரு. பரமகுரு அவர்களால் செப்பம் செய்து வெளியிடப் பெற்றது. இப்பதிப்பு, குன்றக்குடி–திருவண்ணாமலை ஆதீனத்தை ஊர் அறிய, உலகறியச் செய்தவர்களும், தமிழகம் செய்த மாதவமாக விளங்கியவர்களும், ஆதீன ஞானபீடத்து எழுந்தருளியிருந்து நாற்பத்தைந்து ஆண்டுகள் போற்றிப்புரந்தவரும், சமுதாய நலச் சிந்தனையாளருமாகிய 45வது குருமகா சந்நிதானம், திருப்பெருந்திரு தெய்வசிகாமணி அருணாசலதேசிக பரமாசாரிய சுவாமிகள் (தவத்திரு குன்றக்குடி அடிகளார்) அவர்கள் பேரவாவின் படியும், அவர்களை அடியொற்றி அவ்ஆதீனத்து எழுந்தருளியிருந்து,

சமய—சமூக நலம் பேணும் 46வது குருமகாசந்நிதானம் திருவருள்திரு தெய்வசிகாமணி பொன்னம்பல தேசிக பரமாசாரிய சுவாமிகள் அவர்கள் விருப்பத்தின் படியும், 11.11.95 மெய்கண்டார் திருநாள் அன்று வெளியிடப் பெறுகின்றது.

இந்நூலுக்குத் தவத்திரு அடிகளாருடைய ஆன்ற வழிகாட்டு தலுடன், சாத்திர, தோத்திர உண்மைகள் வெளிப்பட மறை பொருள்கள் விளங்க, பலகாலும்பயின்று, பாடல்களை, யாப்பு அமைதி கெடாதவாறு பதம்பிரித்து, பொருள்நலங்கண்டு, குறிப்புரை எழுதியுதவியிருப்பவர்கள், குன்றக்குடி மேல்நிலைப்பள்ளியில், 37—ஆண்டுகளுக்கு மேல், தமிழாசிரியராகப் பணிபுரிந்து ஓய்வு பெற்றிருப்பவர்களும், குன்றக்குடி—திருவண்ணாமலை ஆதீனத்து ஆதீனப்பெரும் புலவரும், சித்தாந்தச் செம்பொருட் புலமையாளரு மாகிய வித்துவான் க. கதிரேசன், எம்.ஏ., பி.எட்., அவர்கள். அமைதிக் கடலாகிய அப்புலவர் பெருந்தகை, திருப்பனந்தாள், காசிமடத்து, செந்தமிழ்க் கல்லூரியாம், அருள் நிலத்தில், தமிழ்ப்பயிராக வளர்ந்த வர்கள். குன்றக்குடி ஆதீனத்து ஞானப்பண்ணையில் மலர்ந்து மணம் பரப்பி வருபவர்கள்.

நூலை, வெளியிட்டு உதவியிருப்பவர்கள், குன்றக்குடி திருவண்ணாமலை ஆதீனத்து அன்புத் தொழும்பர். தவத்திரு அடிகளாருடைய பேரன்பிற்கும், பெருங்கருணைக்கும் இலக்கு ஆகியவர், அடிகளாருடைய சமய—சமுதாயத் தொண்டுகளுக்கெல்லாம் துணையாக இருந்தவர். திருச்சிராப்பள்ளி, அருள்நெறித் திருக் கூட்டத்தின் தலைவர், திருச்சிராப்பள்ளித் திருமுறைமன்றத்தின் தலைவர், திரிசிரபுரச் சைவசித்தாந்த சபையின் தலைவர், தமிழகத்துத் திருமடங்களின் பேரன்பிற்குப் பாத்திரமானவர், அருளாளர், அன்பர், தொண்டர் என்னும் பெருஞ்சிறப்புகளுக்கு உரியவர்களாகிய சிவநெறிப்புரவலர், சிவத்திரு ப. மூக்கப்பிள்ளை அவர்கள். அவர்கள், இவ்வரிய நூலை மேனாள், இந்நாள் குருமூர்த்திகளுடைய விருப்பத்தின்படி தன்னார்வத்துடன் முன்வந்து பெரும் பொருட் செலவில் வெளியிட்டு உதவியுள்ளார்கள்.

இப்பணியில், எளியவனாம் என்னையும் ஈடுபடுத்திய காளத்திநாதப் பெருமானின் திருவடி மலர்களைப் போற்றி வழி படுகின்றேன்.



திருக்கயிலாயபரம்பரைத்
திருவண்ணாமலை ஆதீனம், ஆதி குருமூர்த்திகள்,
திருப்பெருந்திரு
தெய்வசிகாமணி தேசிக பரமாசாரிய சுவாமிகள்

உ

குருபாதம்

# முன்னுரை

அளப்பருங் கருணையே வடிவாய் விளங்கும் பரசிவம், "உறவொடு பகையை ஒழித்து அருள் உருவாய் ஓங்கும்" குருமூர்த்தி வடிவில் ஆன்மாக்கள் ஈடேற எழுந்தருள்கிறது. இக்குருமூர்த்தியர் எழுந்தருளியுள்ள ஆதீனங்களுள், நமது திருக்கயிலாய பரம்பரை குன்றக்குடி திருவண்ணாமலை ஆதீனம், இந்நான்மணி மாலையின் பாட்டுடைத் தலைவராம் ஸ்ரீமத் தெய்வசிகாமணி தேசிக பரமாசாரிய சுவாமிகள் அவர்களால் (கி.பி.1250–1325) திருவண்ணாமலையில் கி.பி.1310–இல் நிறுவப்பெற்றது.

பின்னாளில் திருக்கொடுங்குன்றம் என்ற பிரான்மலையிலும், அதன் பின்னர் குன்றக்குடியிலுமாக இதன் தலைமையகம் அமைந்து பணிபுரிந்து வருகிறது. தோன்றியது முதல் சமயம், சமுதாயம், இயற்றமிழ், இசைத்தமிழ், சங்க நூல் வெளியிடத் துணை நிற்றல், கல்வி, மருத்துவம், அறிஞர்களைப் பாராட்டுதல் முதலிய பல துறைகளில் இது பங்களித்து முத்திரை பதித்து வருகிறது.

நமது ஆதீனத்தின் தம்பிரான் சுவாமிகளாக இருந்து, இருமொழிப் புலமையும் இலக்கணத் திட்பமும், கற்பனை ஆற்றலும் கவித்திறனும், சாத்திரத் தோய்வும் சிவஞானச் செறிவும், கைவந்த நிட்டையும் கனவிலும் குருமூர்த்தியையன்றிக் கருதாத் தகைமையும் வாய்ந்த தம்பிரான் சுவாமிகளாக இருந்த அருட்டிரு குமாரசாமித் தம்பிரான் சுவாமிகள் அவர்கள் நமது ஆதி குருமூர்த்தியைப் பாட்டுடைத் தலைவராகக் கொண்டு, "ஸ்ரீமத் தெய்வசிகாமணி தேசிகர் நான்மணிமாலை", "ஸ்ரீமத் தெய்வசிகாமணி தேசிகர் ஞான அந்தாதி", "ஸ்ரீமத் தெய்வசிகாமணி தேசிகர் சிற்குருமாலை" ஆகிய முக்கனி நூல்களைத் தந்துள்ளார்கள். இவை மூன்றும் சாத்திரச்சாறு, கவிநயம், கற்பனை வளம் கொழிக்கும் ஞானக்களஞ்சியங்கள்.

இம்மூன்றையும் செவிவழியும் ஏட்டின்வழியும் கற்றுவந்த நிலையில் ஏற்பட்ட பிழைநீக்கி, "எழுதா எழுத்து" (அச்சு) வடிவில் வெளியிட 38ஆவது பட்டம் ஸ்ரீமத் ஆறுமுக தேசிக பரமாசாரிய சுவாமிகள் அவர்கள் கட்டளையிட்டருளியபடி சர்வசித்து வைகாசியில் (1887–மே–தூன்) யாழ்ப்பாணம் புலோலியம்பதி சித்தாந்த சிரோண்மணி திருமிகு. ம. தில்லைநாத பிள்ளையவர்களால் "எழுத்துப் பிழையற நன்றாராய்ந்து" சிலப்பதிகார அரும்பத உரை போன்ற திட்பம் நுட்பம் வாய்ந்த அரும்பதவுரையுடன் வெளியிடப் பெற்றது. (முதற்பதிப்பின் முகப்பு, சிறப்புப் பாயிரம் தரும் செய்திகள் இவை)

வணக்கத்திற்குரிய 45ஆவது குருமகா சந்நிதானம் திருவருள்திரு தெய்வசிகாமணி அருணாசல தேசிக பரமாசாரிய சுவாமிகள் அவர்களின் (டாக்டர் தவத்திரு குன்றக்குடி அடிகளார் அவர்கள்) திருவுளப் பாங்கின் வண்ணம் 8.9.1987இல் மகாகுருபூஜைத் திருநாளன்று ஸ்ரீமத் தெய்வசிகாமணி நான்மணி மாலை மட்டும் இரண்டாம் பதிப்பாக அருமை நண்பர் கவிஞர். மரு. பரமகுரு அவர்களால் சந்தி பிரித்து முன்னைய அரும்பதவுரையுடன் குருபூசைவிழா மலராக மலர்ந்தது.

நம் வணக்கத்திற்கும் போற்றுதலுக்குமுரிய 45ஆவது குருமகா சந்நிதானம் அவர்களின் திருவுளப்பாங்கின் வண்ணம், வணக்கத் திற்கும் போற்றுதலுக்குமுரிய நம் 46ஆவது குருமகாசந்நிதானம் திருவருள் திரு தெய்வசிகாமணி பொன்னம்பல தேசிக பரமாசாரிய சுவாமிகள் அவர்கள் (இளவரசுப் பொறுப்பிலிருந்தபோது) அருளிய அருளாணையின்படி "ஸ்ரீமத் தெய்வசிகாமணி நான்மணி மாலை" மட்டும் இன்று மூன்றாம் பதிப்பாக மலர்ந்துள்ளது.

இன்றைய நிலைமைக்கேற்பச் சந்தி பிரித்து, குறிப்புரை, இன்றியமையா இலக்கணக்குறிப்பு, அணி சுட்டல், பொருள்கோள் முறைமை, முடித்துக்காட்டல், நயமிகு தொடர்சுட்டல், பாடல் முதற்குறிப்பு, சொல்லடைவு என்ற வகையில் அமைந்துள்ள இந்நான்மணி மாலையும், ஆதீனக் குரு முதல்வர் வரலாறும் அடியேனின் கன்னி முயற்சியாக வெளிவருகிறது. முதற்பதிப்பின் அரும்பதவுரை, உரிய பாக்களின் கீழே தரப்பட்டுள்ளது.

இத்துடன் நம் ஆதீனப்புலவர் சைவசித்தாந்த நன்மணி, விரிவுரை வித்தகர், பேராசிரியர் வித்வான் சு. சுவர்ணகாளீச்சுரனார் அவர்கள் எழுதிய "குன்றக்குடி திருக்கயிலாய பரம்பரை அருணை ஆதீனக் குருபரம்பரை அகவல்" (முன் வெளியீட்டு நாள் 4.7.1961) ஆதீனக் குருமூர்த்திகள் பட்டியல் ஆகிய இரண்டும் இணைக்கப் பெற்றுள்ளன.

தமது இடையறா ஆராய்ச்சிப் பணி, திருமுறைப் பணிகளுக்கிடையே என் கன்னி முயற்சியான குறிப்புரை முதலிய வற்றை முழுவதுமாகப் படித்து ஒப்புதல் வழங்கியதுடன், என்னை வாழ்த்தியும் ஊக்குவித்துள்ள வணக்கத்திற்குரிய என் கல்லூரிப் பேராசிரியர் பண்டித வித்வான், சித்தாந்த நன்மணி, தொல்காப்பியச் செல்வர் திருமிகு டாக்டர் கு. சுந்தரமூர்த்தி அவர்கட்கு (அனைத்துலக சைவசித்தாந்த ஆராய்ச்சி நிறுவனம், மயிலாடுதுறை – 609 001) என் நன்றியறிதலும் மாறாக் கடப்பாடும் உரியன.

நான்மணிமாலைப் பாக்களுக்குப் பண்ணமைத்துத் தந்துள்ள ஆதீன ஓதுவார் திருமிகு. ஆ.மு. சம்பந்த மூர்த்தி அவர்களுக்கும், நூலைப் படித்து ஊக்குவித்த அருமை நண்பர் கவிஞர் மரு. பரமகுரு

அவர்களுக்கும், நன்முறையில் படியெடுத்துத் தந்துதவிய அருமை நண்பர் சோம. உலகநாதன் அவர்கட்கும், நன்முறையில் அச்சிட்டுதவிய அச்சகத்தார்க்கும் என் நன்றியறிதலைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

இந்நூலை அச்சிட்டுதவத் தன்னார்வமுடன் முன்வந்துள்ள நம் சந்நிதானங்கள்மேல் அளவற்ற பத்திமை கொண்டவரும், திருச்சிராப் பள்ளி மாவட்ட அருள்நெறித் திருக்கூட்டத் தலைவரும், திருமடத்தின் பணிகளில் ஈடுபாடு கொண்டவரும், திருமுறைத் தோய்வும், சைவ சித்தாந்த அறிவும் சைவசீலமும் நிரம்பிய சிவபூசைச் செல்வர் திருமிகு. ப. மூக்கப்பிள்ளை அவர்கட்கு அடியேனின் நன்றிக்கடப்பாடு உரியது.

இந்நூல் வெளிவரத் திருவுளம் பற்றியபொழுதே என்னை வாழ்த்தியருளியும், ஊக்குவித்தும், நெறிப்படுத்தியும், வந்ததுடன் அமையாது, தம் திருமேனி நலம் பேண வேண்டிய நேரத்தில்கூட தொடர்ந்து தாம் செய்து வந்த பல்வேறு பணிகளுக்கிடையே சிறியேன் பொருட்டும் நேரம் ஒதுக்கிக் கொண்டு இதை முழுமையாகப் படித்து பார்த்து அரிய ஆராய்ச்சியுரை வழங்கி வாழ்த்தி ஆட்கொண்ட ருளியுள்ள இன்று பரிபூரண நிலையில் தோன்றாத் துணையாய் நின்றருளும் வணக்கத்திற்குரிய 45வது குருமகாசந்நிதானம் அவர்களின் பொன்னார் திருவடிகட்குப் பெருங்கடப்பாட்டுடன் மனம் மொழி மெய்யால் என் கனிந்த வணக்கங்களைச் செலுத்துகிறேன்.

இவர்களது திருவுளக் குறிப்புணர்ந்த அன்றே இந்நூலைத் தந்து அருளாணை வழங்கியதுடன் இன்று கனிந்த வாழ்த்துரையும் வழங்கி யருளியுள்ள வணக்கத்திற்குரிய 46வது குருமகா சந்நிதானம் திருவருள்திரு தெய்வசிகாமணி பொன்னம்பல தேசிக பரமாசாரிய சுவாமிகள் அவர்களின் பொன்னார் திருவடிகளையும் திருவருளையும் மனம்மொழி மெய்யால் வணங்கி மகிழ்கிறேன்.

**தந்தது உன்றன்னைக் கொண்டது என்றன்னை**
**அந்தமொன்றில்லா ஆனந்தம் பெற்றேன்.**
**யாது நீ பெற்றதொன்று என்பால்.**

குன்றக்குடி
28.6.95

அடியவன்
க. கதிரேசன்
ஆதீனப்புலவர்

8

## ஆய்வுரை – வாழ்த்துரை

உ

*சிவ சிவ*

*தன்கடன் அடியேனையும் தாங்குதல்*

*என் கடன் பணி செய்து கிடப்பதே*

**தவத்திரு குன்றக்குடி அடிகளார்**

குன்றக்குடி – 623 206
ப. மு. தே. மாவட்டம்
தொலைபேசி: குன்றக்குடி 9227

*நாள்: **16.1.95***

தமிழகத்தில் உள்ள குருபரம்பரை ஆதீனங்களில் மிகவும் தொன்மை வாய்ந்தது திருவண்ணாமலை ஆதீனம். திருவண்ணா மலையில் ஆதி சைவராகப் பிறந்து தெய்வசிகாமணி என்ற திருநாமம் பெற்று அண்ணாமலை அண்ணலுக்கு நாட்பூசையும் சிறப்பொடு கூடிய பூசையும் நிகழ்த்தும் உரிமையும் பெற்றிருந்தவர் இந்த ஆதீனக் குருமுதல்வர். திருவண்ணாமலைப் பகுதியை கி.பி.1291 முதல் 1312 வரை ஆண்ட வல்லாள மகாராசன் இவரிடம் பக்தி கொண்டொழுகினான். இவருடைய வரலாற்றின் ஒருபகுதி திருவண்ணாமலைத் திருக்கோயிலின் தெற்கு மதிற்சுவரில் புடைப்புச் சிற்பங்களாக அமைந்துள்ளது. அதாவது வல்லாள மகாராசனின் இறந்த குதிரையைத் தம் அருளாற்றலால் எழுப்பித்த வரலாறு. அருணைமலை அண்ணலின் சந்நதியில் அர்த்த மண்டபத்திலும் இவருடைய திருவுருவம் புடைப்புச் சிற்பமாக அமைந்துள்ளது. திருவண்ணாமலையிலிருந்து வேட்டவலம் செல்லும் சாலையில் இவருடைய அருள் நலம் கொழிக்கும் திருக்கோயில் சந்நிதி அமைந்துள்ளது. இவர் சகலாகமபண்டிதர் எனப் போற்றப்பெறும் அருணந்தி சிவாச்சாரியாரின் மாணாக்கராக இருக்கலாம் என்று கருதப் பெறுகிறார். திருவண்ணாமலை ஆதீனத்திற்குச் சிவாகமமும் செந்தமிழும் இரட்டைக் கண்கள். குருபரம்பரை வாழ்த்தில்கூட,

"சித்தமிழ்த் மான சிவாகமம் வாழிசெழு
முத்தமிழும் வாழி முறை"

என்று பாடப்பெற்றுள்ளது.



திருக்கயிலாயபரம்பரைக்
குன்றக்குடி – திருவண்ணாமலை ஆதீனம்
45-வது குருமகாசந்நிதானம்
திருப்பெருந்திரு தெய்வசிகாமணி அருணாசல தேசிக
பரமாசாரிய சுவாமிகள்
(தவத்திரு குன்றக்குடி அடிகளார்)

திருவண்ணாமலை ஆதீனக் குருமுதல்வர் அருள்திரு தெய்வ சிகாமணி தேசிகபரமாசாரிய சுவாமிகள் மீது, குமாரசாமி முனிவர் நான்மணிமாலை ஒன்று இயற்றியுள்ளார். இந்த நான்மணிமாலை சிவாகமக் கருத்துக்களும் சித்தாந்த உண்மைகளும் கொண்ட சிறந்த தத்துவ இலக்கிய நூல்.

தமிழகத்தின் தொன்மை நெறியாகிய சிவநெறியில் துறவுநெறி இருந்ததில்லை. சைவ சமயத்தினர் வழிபடும் கடவுளே அம்மையப்பர். பௌத்த சமண சமயங்களின் தாக்கமே சைவத்தில் துறவு. திருவண்ணாமலை ஆதீனத்தை நிறுவிய ஆதிகுருமுதல்வர் இல்லற நெறியில் நின்றவர் தாம். இந்நூலில் பா7 அடி, 10–15 இதற்குச் சான்றாகும். மேலும், இல்லறத்தாருக்குரிய முப்புரி நூல் அணிதல், நித்திய வேள்வி செய்தல் முதலியன இன்றும் இந்த ஆதீனத்தில் (துறவு நிலை எய்திய பின்னும்) நடைமுறையில் இருக்கிறது. பழந்தமிழ் மரபில் குரு – சிஷ்ய பரம்பரைக்குச் சாதிமுறைகள் தடையில்லை. ஆதலால் ஆதிசைவர்களிடத்திலேயே ஆதீனம் இல்லை. பல்வேறு குலத்தினரும் வந்துள்ளனர். இன்று இந்த நெகிழ்வு இல்லை.

அருள்திரு விபுலானந்த அடிகள் "இமயஞ்சார்ந்த காக்கை பொன்னாயிற்று" என்று ஒரு கட்டுரை எழுதியுள்ளார். அதனையொத்த செய்தி இந்நூலிலும் உள்ளது.

"காக்கையைத் தன்நிறம் ஆக்குமே ருப்போல்
என்போ வியரையும் நின்போல் ஆக்கலின்" – 35:39

என்பது காண்க.

குருமூர்த்திகளிடம் எவரும் எளிதிற் சென்று தீட்சை பெறலாம், சிவானுபவம் பெறலாம். இரும்பைப் பொன்னாக்குதல்போல், தீட்சை சீவபோதத்தை அகற்றி, சிவஞானத்தை நல்கக் கூடியது. ஆசாரம் இல்லையென்று புறக்கணிக்காமல் அவர்களுக்கும் தீட்சையளித்து, சிவானுபவத்தை வழங்கியருளும் பாங்கு,

"ஆவுரித்துத் தின்றுழலும் புலைய ரேனும்
அவர்கண்டீர் நாம் வணங்கும் கடவுளாரே!

என்ற அப்பரடிகள் வாக்கை நினைவுபடுத்துகிறது.

ஆதிகுருமூர்த்திகள் தம்மை நினைந்து வழிபடுவோருக்கு இருமையின்பமும் தருவர் என்று நூலில் கூறப்பட்டுள்ளது. இது இன்றும் விளங்கும் உண்மை. குருமூர்த்திகள் "வலம் தரும் புகழ் தேவசிகாமணி" என்று பாராட்டப்படுகிறார். குருமூர்த்திகளாகிய

தேவசிகாமணியின் தண்ணருளால் அன்றி உயிர்க்கு உய்தியில்லை என்பதை நூலாசிரியர் அறுதியிட்டுக் கூறுகின்றார்.

"ஒன்றிய சந்தசுதா ளோர்கற்பங் கையாக
வென்றி வியாகரண மேயா னனமாக வன்றியும்
சோதிடம் கண்ணா நிருத்தம் செவியாக
நன்றுடைய சிட்சையே நாசி வடிவாக
நின்றஆ றங்கத்தில் நீள்வேத மாமேனி
கன்றரிய அந்தக் கரணம் சிவாகமமாச்
சென்றருணைத் தேவ சிகாமணிச்சீ வன்செலுத்தில்
அன்றிவரா துய்வதரு ளால்" – (பா.37)

என்பது ஆழ்ந்த சிந்தனைக்குரியது.

"அருள்உண் டெனில் உண் டறங்களெல்
லாம்அவ் வருளு நல்ல
பொருள்உண் டெனில் உண்டு போகியர்க்
கேயிவர் போகமல
இருள்உண் டெனில் உண்டிங் கெல்லாம்
வராமல் இருந்துமொரு
தெருள்உண் டெனில்உண்டு தேவ
சிகாமணிச் சிற்குருவே! – (பா.38)

இந்தப் பாடல் பலகாலும் படிக்கத் தக்கது. நினைந்து நினைந்து ஓதுதலுக்குரியது.

வாழ்க்கை என்பது நம்பிக்கையின்பாற்பட்டது. 'உண்டு', 'இல்லை' என்ற விவாதம் அன்றும் இருந்திருக்கிறது. 'அருள் உண்டெனில் உண்டு' என்கிறார் ஆசிரியர். அருளும் அறமும் பொருள் உண்டெனில் உண்டு. அறம், பொருள், இன்பம் நடுவணது எய்த இருதலையும் எய்தும் என்ற கருத்து ஒப்புநோக்கத் தக்கது. இப்பாடல் பொருள் இன்றியமையாமையை உணர்த்துகிறது. அருளும் அறமும் பொருளும் உள்ள உலகில் மல இருளும் உண்டு. பொருள், ஆன்மாவைப் பொருத்து இருள்மலமாகவும், ஒளிமயமாகவும் செயற்படும். ஆதலால் இந்த உலகில் இருளும் உண்டு. இருள் மலத்தால் வரும் துன்பத்தினைத் தடுத்து நிறுத்த, தேவசிகாமணி தேசிகரின் ஞானம் உண்டு என்று நூலாசிரியர் கூறுவது சிந்தனைக்குரிய பகுதி, செயலாக்கத்திற்குரிய பகுதி.

தேவசிகாமணி தேசிகர் சுத்தாத்துவித சைவ சித்தாந்த நெறியைச் சார்ந்தவர்; அந்நெறியைப் போதித்தவர். இந்த ஆதீனத்தைச் சார்ந்த யாழ்ப்பாணத்து ஞானப்பிரகாச முனிவர் சிவஞான சித்தியாருக்கு ஓர் உரை இயற்றியுள்ளார். அந்த உரை சிவசமவாதமாக அமைந்துள்ளது என்ற கருத்து நிலவுகிறது. இது ஆய்வுக்குரிய செய்தி. அதன் காரணமாகத் திருவண்ணாமலை ஆதீனமும் சிவசமவாத மரபைச் சேர்ந்தது என்று கூறுவோர் உண்டு. இது முற்றிலும் தவறு. ஆதிமூர்த்திகள் தேவசிகாமணி தேசிகர் "சுத்தாத்துவித குரு" (பா.39) என்று இந்நூல் போற்றுகிறது.

"களங்கமுள்ள தங்கத்தைத் தூய்மை செய்து மாசறு பொன்னாக்குதல் போல், தேவசிகாமணிச் சிற்குருவை அடைந்த நான் தூய்மை பெற்றேன். இனி நான் வாசனாமலத் தாக்குதலுக்கு ஆளாகி மாசுடைய தங்கம் ஆகேன்" என்ற நூலாசிரியர் கருத்து வாழ்வியல் உண்மை. ஞானம் பெறுதல் அரிது. பெற்ற ஞானத்தை வாசனாமலத்தாக்குதலுக்கு இரையாகி இழந்தோர் பலர். அங்ஙனம் ஆதல் ஆகாது என்பது அறிவுரை.

அடுத்தருணைத் தேவ சிகாமணியால் அன்றோ
வடுத்தனைநீத் தங்கனகம் ஆனேன் – தொடுத்த
அலகுடைய தங்கமினி யாகேன்அப் பாலும்
இலகுடைய தங்கமா வேன். – (பா.25)

என்பதறிக

நூலாசிரியருக்கு உலகம் பற்றிய சிந்தனை இருப்பது எண்ணத் தக்கது. வாழ்த்தில்

"சீர்வாழி தெய்வ சிகாமணி சீரருணை
ஊர் வாழி வாழி உலகெல்லாம்!"

என்கிறார். "வாழி உலகெல்லாம்" என்னும் இச்சிந்தனை இன்று வேண்டிய ஒன்று.

தத்துவ நூலாக விளங்கும் இந்நூலுக்குக் குறிப்புரை எழுதிய நமது ஆதீனப்புலவர் திருவாளர் க. கதிரேசன் அவர்கள் தமது தத்துவ அறிவைப் புலப்படுத்தி, தத்துவமேதையாக விளங்குகின்றார். மேலும் பல நூல்களுக்கு உரை காண்பாராக! பாராட்டுக்கள்! வாழ்த்துக்கள்!

*அடிகளார்*

உ
*சிவ சிவ*

## ஆய்வுரை – வாழ்த்துரை

திருவருள்திரு
**தெய்வசிகாமணி பொன்னம்பல**
**தேசிக பரமாசாரிய சுவாமிகள்**
(ஆதீனகர்த்தர்)

திருவண்ணாமலை ஆதீனம்
குன்றக்குடி 623 206
பசும்பொன் முத்துராமலிங்கத்
தேவர் மாவட்டம், தமிழ்நாடு

தொலைபேசி எண்: குன்றக்குடி 64267
காரைக்குடி 04565–23215

*நாள். 4.8.95*

நம் திருக்கயிலாய பரம்பவைக் குன்றக்குடி திருவண்ணாமலை ஆதீனக் குருமுதல்வர் திருவருள்திரு தெய்வசிகாமணி தேசிக சுவாமிகள் அவர்களைப் போற்றிடும் செந்தமிழ்ப் பாமாலை தெய்வசிகாமணி நான்மணிமாலை. நுகரும் தேன் நிறைந்த மலர்களை இணைத்தால் இறைவனின் திருவடிக்கு மாலையாகும். சிவஞானத் தேன் ததும்பும் செழுந்தமிழ்ப் பாக்களை இணைத்து "தெய்வ சிகாமணி நான்மணி மாலை" எனும் ஆரத்தை, அருள்திரு குமாரசாமி முனிவர் குருமுதல்வருக்கு அணிவித்து அழகு செய்துள்ளார்.

தமிழினத்தின் சிந்தனையின் பயனாக அறிவின் ஆக்கமாகத் தோன்றியதே சிவநெறி. மனித வாழ்க்கையில் படைப்பின் நிறை வின்மையையும் அறிவின் எல்லையைக் காணமுடியாமையையும் கண்டுணர்ந்தபோது எல்லை கடந்த நிலைக்கு ஏறிவளரும் நிலையில் தோன்றியதே சிவநெறி. சிவநெறியின் அடித்தளம் வாழ்க்கையின் படிப்பினைகளும் அறிவுமேயாகும்.

"முன்னைப் பழம்பொருட்டும் முன்னைப் பழம் பொருளே
பின்னை ப் புதுமைக்கும் பேர்த்தும்அப் பெற்றியனே"

என்ற மணிவ ாசகர் வாக்கிற்கும்



திருக்கயிலாயபரம்பரைக்
குன்றக்குடி – திருவண்ணாமலை ஆதீனம்
46-வது குருமகாசந்நிதானம்
திருப்பெருந்திரு தெய்வசிகாமணி பொன்னம்பல தேசிக
பரமாசாரியசுவாமிகள்
(தவத்திரு பொன்னம்பல அடிகள்)

"தொன்மையவாம் எனும் எவையும் நன்றாகா இன்று
தோன்றிய நூல் எனும் எவையும் தீதாகா"

என்ற உமாபதிசிவம் வாக்கிற்கும் இணங்கப் பழமை நலம் குன்றாமலும் புதுமைக்கு நெகிழ்ந்தும் கொடுக்கும் நெறி சிவநெறி.

சிவநெறியைத் தேனார் தீந்தமிழ் மறைகள் போற்றின. சிவநெறி, பௌத்த சமண மாயா வாதங்களைச் சந்திக்க வேண்டிய காலக் கட்டாயம் ஏற்பட்டது. அப்பொழுது இலக்கியங்களில் பரவிக் கிடந்த சைவக் கருத்துக்களை மையமாகக் கொண்ட சைவ இலக்கண சாத்திர நூல்கள் தோன்றின. சமயச் சான்றோர்களும் சந்தானாசாரியர்களும் போற்றி வளர்த்த சமய நெறியைப் பேணத் திருமடங்கள் தோன்றின.

அருள்ஞானப் பண்ணையாக, தொண்டின் உறைவிடமாக விளங்கும் நம் குன்றக்குடித் திருவண்ணாமலை ஆதீனக் குருமுதல்வர் திருவருள்திரு தெய்வசிகாமணி தேசிக சுவாமிகள் அவர்களை, அருள்திரு குமாரசாமி முனிவர் செந்தமிழ்ப் பாவால் அருச்சித்துள்ளார். குன்றக்குடி திருவண்ணாமலை ஆதீனத்தின் குருமகா சந்நிதானங்களும் தம்பிரான்களும் சிவஞானானுபவச் செந்தமிழ்ச் சீலமும், கேடும் ஆக்கமும் கெட்ட திருவும், ஓடும் செம்பொன்னும் ஒக்கவே நோக்கும் வித்தகத் துறவும் வழிவழியாய் உடையவர்கள். அந்தச் சீர்மிகு வழியில் நம் திருமடத்து அருள்திரு குமாரசாமித் தம்பிரான், குருமுதல்வரைப் போற்றிப் பாடியது இந்தப் பாமாலை நூல்.

இந்த நூலுக்குக் குறிப்புரை செய்துள்ளார் நம் ஆதீனப் புலவர் திருமிகு. க. கதிரேசன் அவர்கள். திருமடத்துள் முடங்கி இருந்த முனிவர் தமிழைத் தம் குறிப்புரையால் மலர்ந்து மணம் பரவச் செய்துள்ளார். புலவர் திருமிகு. க. கதிரேசன் அவர்கள் ஆன்றவிந்தடங்கிய கொள்கைச் சான்றோரைப் போல் அடக்கமே உருவான பண்பாளர். செந்தமிழும் சிவநெறியும் உயிரெனப் போற்றும் பெருந்தகையாளர். முற்றிய நெற்கதிர் தலைசாய்ந்து பணிதல்போல் வற்றாத கல்வி வளம் பெற்றும் அடக்கமே உருவான அறிஞர். முன்னைப் பழமைக்கும் பழமையாய் மறைந்து இருந்த நான்மணிமாலை என்னும் இந்நற்றமிழ் ஆரத்தை மீண்டும் புவிமணக்கச் செய்த புலவர் திருமிகு. க. கதிரேசன் அவர்கள் வாழ்க! வாழ்க!

நம் குருமகா சந்நிதானம் அருள்நெறித் தந்தை அவர்கள் பால் பேரன்பும் அருள்நெறியில் பற்றும் உடைய சிவநெறிப் புரவலர் திருச்சிராப்பள்ளி சிவத்திரு. ப. மூக்கப்பிள்ளை அவர்கள் முயற்சியால் இந்நூல் வெளிவருவது மிக்க பெருமைக்குரியது. சைவநெறி பரப்பும் பணியில் தன்னார்வத்துடன் பணியாற்றும் தகைசால் சிவத்திரு ப. மூக்கப்பிள்ளை அவர்கள் வாழ்க! வாழ்க!

நம் குருமகா சந்நிதானம் அருள்நெறித் தந்தை அவர்கள் ஆக்கத்தாலும் ஊக்கத்தாலும் நிறைவு செய்யப்பெற்ற பணி. குருமகா சந்நிதானம் அவர்கள் இருக்கும்பொழுதே வெளியிடும் பேறு நமக்கு வாய்க்கவில்லை என்ற உறுத்தல் இருந்தபோதும் தோன்றாத் துணையாய் அருள்மழை பொழிகின்றார்கள் என்ற ஆனந்தத்துடன் திருவருளையும் குருவருளையும் நினைந்து நினைந்து வணங்கிப் போற்றுகின்றோம்.

என்றும் வேண்டும் இன்ப அன்பு

ஸ்ரீமத் தெய்வசிகாமணி,
பொன்னம்பலதேசிகர்

## வாழ்த்துரை

பண்டித வித்வான், சித்தாந்த நன்மணி,
தொல்காப்பியச் செல்வர்,
பேராசிரியர், டாக்டர்,
**கு. சுந்தரமூர்த்தி**, எம்.ஏ., பி.எச்.டி.,
**முன்னாள் முதல்வர்,**
**கே.வி.எஸ்.எஸ். கலைக்கல்லூரி, திருப்பனந்தாள்.**
***அனைத்துலக சைவசித்தாந்த ஆராய்ச்சி நிறுவனம்***
தருமபுரம், மயிலாடுதுறை 609 001

ஆவினன் குடியகம்
56, தருமபுரம் சாலை
மயிலாடுதுறை 609 001

*நாள் **12.10.94***

திருக்கயிலாய பரம்பரைத் திருவண்ணாமலை ஆதீனம் கடந்த எழுநூறு ஆண்டுக் கால வரலாறு படைத்ததாகும். புறச் சந்தான குரவர்களில் இரண்டாமவரான அருள்நந்தி சிவாச்சாரியாரிடம் அருளுபதேசம் பெற்றுத் திருவண்ணாமலையில் ஞானபீடம் ஒன்றை நிறுவியருளி அப்பீடத்தின் முதற்குரவராக இருந்தருளியவர்கள் அருள்மிகு தெய்வசிகாமணி தேசிக பரமாசாரிய மூர்த்திகளாவார். இவர்கள் வழிவந்த குருமூர்த்திகளில் பதினேழாவது பட்டத்தில் எழுந்தருளியிருந்த குருமூர்த்திகள் அருள்மிகு நாகலிங்க தேசிக குருமூர்த்திகளாவர். இவர்கள் காலத்தில் இராமநாதபுரம் மாமன்னரின் வேண்டுகோட்கிணங்கத் தமது சீடர் ஒருவரை இராமநாதபுரம் மாவட்டத்திலுள்ள பிரான்மலையில் இருந்து அருளாட்சிபுரிய ஆட்படுத்தினார்கள். காலப்போக்கில் குன்றக்குடியை இடமாகக் கொண்டு இம்மரபில் வந்த குருமூர்த்திகளின் அருளாட்சி அமைவதாயிற்று.

இவ்வாதீனத்தில் பல தவ முனிவர்களும் அறிவு சான்ற புலவர்களும் அடியவராக இருந்துள்ளார்கள். அவர்களில் ஒருவர் குமாரசுவாமித் தம்பிரான் என்பவர் ஆவர். இவர்கள் ஓடும் செம்பொனும் ஒக்கவே நோக்கும் திருவுளப் பாங்கும், இவ்வாதீனத்து வழிபடு கடவுளாகிய காளத்தி நாதரிடத்தும் தம் குருமுதல்வரிடத்தும் அயராத பத்திமையும் உடையவர்கள். இவர் அருளிய நூல்களுள்

ஒன்றே 'தெய்சிகாமணி தேசிகர் நான்மணிமாலை' என்பதாகும். வெண்பா, கட்டளைக்கலித்துறை, ஆசிரியப்பா, ஆசிரிய விருத்தம் ஆகிய நால்வகைப் பாக்களால் நாற்பது பாடல்களைக் கொண்ட நூல் இதுவாகும். தேன்மணிமாலையாம் இந்நான்மணி மாலையைத் தம் குருமூர்த்திகளின் திருவடி மலர்களுக்கு உரித்தாக்கி இருக்கும் இந்நூல் அறம், பொருள், இன்பம் ஆகிய இம்மைப் பயன்களை அடையவும், முக்குண வயத்தால் முறை பிறழ்ந்து இயங்கும் இவ்வுலக வாழ்வை நீத்து வீடு பேறு அடையவும் வாய்ப்பாக அமையும் என இம்முனிவர் அருளுகின்றார். அமேயம், அனிச்சயம், அதுலம், அமலம் முதலிய சொற்களை எடுத்தாளும் திறத்தால், இம்முனிவரின் வடமொழிப் புலமையை அறிய முடிகின்றது. உவமை, உருவகம், சிலேடை, தற்குறிப்பேற்றம் முதலிய அணிகள் ஆங்காங்கு அமைந்து சொற்பொருள்களின் சுவைநலன்களை மிகுவிக்கின்றன. சைவ சித்தாந்தக் கருத்துக்களை இயைபுபடுத்தி அருளியிருப்பது முனிவர் பெருமானின் முதிர்ந்த சமய நுண்ணுணர்வை எடுத்துக் காட்டுகின்றது.

இதற்கு அமைந்த குறிப்புரை இந்நூலை ஆழமாகவும், அகலமாகவும் உணர்தற்குத் துணை செய்கின்றது. இவ்வாற்றான் இந்நூல் அரியதொரு படைப்பாகவே அமைந்துள்ளது.

இந்நூல் வெளிவருதற்குத் தம் அரிய புலமை நலத்தையும், உடல் உழைப்பையும் தந்திருப்பவர் சிவநெறிச் செல்வர் புலவர் திரு. க. கதிரேசன் அவர்கள் ஆவர். ஆழ்ந்த புலமை நலமும், மேதக்க பத்திமையும் உடைய அவர்களுக்குத் திருவருளும், குருவருளும் முன்னின்று, மேன்மேலும் இத்தகைய பணிகளை ஆற்றிச் சிறக்க அருளுமாக.

இந்நூலைச் சீரிய முறையில் வெளியிட்டருளும் இவ்வாதீனத்து 45வது குருமூர்த்திகளாக விளங்கும் அருள்மிகு தெய்வசிகாமணி அருணாசல தேசிக பரமாசாரிய சுவாமிகள் அவர்களின் திருவடி மலர்களுக்குத் தமிழ்ச் சைவ உலகம் என்றென்றும் நன்றி பாராட்டக் கடமைப்பட்டுள்ளது. அவர்களின் திருவடி மலர்களுக்கு அடியுவனின் வணக்கமும் நன்றியும் என்றும் உரியவாம்.

*கு. சுந்தரமூர்த்தி, எம்.ஏ., பிஎச்.டி.,*

# திருப்பெருந்திரு தெய்வசிகாமணி தேசிகர் (ஆதி குருமுதல்வர்)

## *வரலாறு*

தலைப்படு கலைமதி தாங்காது, ஆங்குஅத்
தலைப்படு கலைமதி தாங்கி; நிலைப்படு
மானிட னாய வடிவுகொண் டருளாது,
மானிட னாய வடிவுகொண் டருளி;
எற்பணி பூணாது, எற்பணி பூண்டு;
பாரிடம் சூழாது பாரிடம் சூழ்தர

— *பண்டார மும்மணிக்கோவை 14*

என்வடிவம் நின்வடிவாக் கொண்டாய் எளியேற்கு உன்
தன்வடிவம் நல்கத் தகும்கண்டாய்

— *பண்டார மும்மணிக்கோவை 3*

என்று, அருள்திரு அறுமுகப்பரமன் திருவருளால் ஓதாது உணர்ந்த போதராய் விளங்கிய ·குமரகுருபர அடிகளின் திருவாக்குகளுக்கு இலக்கியமாய் இலங்கியவர், நம் குன்றக்குடி திருவண்ணாமலை ஆதீன ஆதிகுருமுதல்வர் ஸ்ரீதெய்வசிகாமணி தேசிகர் அவர்கள் ஆவார்கள்.

"பலர்புகழ் ஞாயிறு கடற்கண்டாங்கு, ஓவர இமைக்கும் சேண் விளங்கு அவிர்ஒளியாய்", மலைகண்ட ஞாயிறாய்த் திருவண்ணா மலைத்திருப்பதியில் இவர் தோன்றினார். இந்த எழு ஞாயிற்றின் காலம் கி.பி. 13ஆம் நூற்றாண்டு.

சந்தான குரவருள் ஒருவராகப் போற்றப்பெறும் அருள்நந்தி சிவத்தின் ஞானபரம்பரையில் வந்தவர்; அவருக்கு அருமைச் சீடராய் அமைந்திருந்தவர் நம் குருமூர்த்திகள்.

அண்ணாமலையாரை முப்போதும் திருமேனி தீண்டிவழிபடும் பேறுபெற்ற ஆதிசைவர் ஒருவர், திருவண்ணாமலை அருணாச லேசுவரர் திருக்கோயில் கொடிமரத்தடியில் நம் தெய்வசிகாமணி மூர்த்தியாம் குழவியைக்கண்டு எடுத்து வளர்த்து வந்தார்.[1] இது ஏறத்தாழ கி.பி. 1250–இல்[2] நிகழ்ந்தது எனலாம்.

கருவிலேயே திருவமைந்த இவரிடம் உறுப்பிலக்கணம் 32—ம் (சாமுந்திரிகம் 32) அமைந்திருந்தன என்று இந்நூலின் செய்யுள் எண் 15 (அடி 63—67) கூறும். இளமையிலேயே கற்பனை கற்று, கேட்பன கேட்டு, உணர்வன உணர்ந்த இவர், உயர்வற உயர்நலம் உடையவரானார். இவரது 16ஆம் அகவையில், பெற்றோர் இவருக்கு மணம் முடித்து மகிழ்ந்தனர். இல்லறம் மேற்கொண்டாராயினும் "தான் ஒரு பொருளைத் தான் விரும்பாமல்" இறையருள் வாழ்வில் திளைப்பதிலேயே நாட்டம் கொண்டிருந்தார்.

ஒருநாள், அண்ணாமலை அண்ணலின் வழிபாட்டிற்குத் தந்தையாருடன் இவரும் வழக்கம்போல் புறப்பட்டார். தந்தையைத் தொடர்ந்த இவரை, "ஞானத்திரளாய் நின்ற பெருமான், ஊனத்திரளை நீக்கித்" தடுத்தாட் கொள்ளத் திருவுளம் பற்றினான்; கொடிமரத்தருகே ஆட்கொண்டான்; "வால்வெள்ஏறு" ஏறி வானில் காட்சிதந்தான். அன்பெனும் ஆறுகரையது புரள, கண்கள் ஆனந்த அருவிநீர்பாய, மெய்ம்மயிர் பொடிப்ப இவர் அக்கொடி மரத்தருகிலேயே நிலம்பட வீழ்ந்து வணங்கி மூர்ச்சையானார். "அன்பனே திருத்துறையூரில் அருள்நந்தியைச் சென்றடைக" என்று உணர்த்த உணர்ந்து எழுந்தார்; தன்வசம் இழந்த பரவசநிலையில் திருத்துறையூர் நோக்கிப் புறப்பட்டார்.

அன்றிரவே, திருத்துறையூரில் அருள்நந்தி சிவத்தின் கனவில் பரசிவம் எழுந்தருளி

"என்னுடை அன்பன் இனிதே வருகிறான்
அன்னவன் தனக்குத் தீக்கை புரிந்து
சிவஞான போதம் செப்புக

*— அருணை ஆதீனக் குருபரம் பரை அகவல், அடி. 78—80*

என்று பணித்து எழுந்தருளிப் போயினார்.

தாய்ப்பசு நோக்கிவரும் புனிற்றிளங் கன்றென வந்த தெய்வசிகாமணி, அ்ருள்நந்தி சிவத்தின் அடிமலர், படிமிசை வீழ்ந்து பணிந்தார்; தீக்கை பெற்றார்; உபதேசமும் சிவஞான போதமும் பெற்றார்; உள்ளம் குளிர்ந்து உவகை கொண்டார். அச்சிவம், இவரைத்தம் அணுக்கத் தொண்டராக்கி அகம்களித்தது.

பரசிவமே தன் ஆன்மார்த்த பூசைக்குச் சுயம்புவாய் எழுந்தருள வேண்டும் என்று ஆராக் காதல் கொண்ட சீடரின் கருத்தறிந்த சிவம், திருக்காளத்தி செல்லப் பணித்தது.

திருக்காளத்தியப்பரைக் கண்டுவணங்கி ஆடிப்பாடிக்களித்த தெய்வசிகாமணி, தன்னை மறந்தார். "அன்பனே, உனக்காக நாம் திருக்கோயிற்புறத்துள்ள புற்றில் இடங்கொண்டுள்ளோம்" என்று உணர்த்தினார். உணர்த்த உணர்ந்தவர், புறப்பட்டுப் போய்ப் புற்றிடங் கொண்டிருந்த புராதனனை – காளத்தி வள்ளலைக்கண்டு களிகொண்டார்; போற்றினார்; "மெய்தான் அரும்பி விதிர்விதிர்த்து, விரையார்கழற்குக் கைதான் தலைவைத்துக் கண்ணீர் ததும்பி வெதும்பிப் போற்றி, சயசய போற்றி" என்று நிலமுறப்பணிந்தார்; முறைப்படி எடுத்துக்கொண்டு திருவண்ணாமைல அடைந்தார். (இச்சுயம்பு மூர்த்தியே – காளத்தியப்பரே – இன்னும் திருமடத்தில் ஆன்மநாயகராக எழுந்தருளியிருந்து அருள்பாலித்து வருகிறார்).

காளத்தியப்பரை ஆன்ம நாயகராகப்பெற்ற நம் குரு மூர்த்தியின்பால் ஞானச் சுடரொளிவீசியது. அந்த அருள்ஒளியால் ஆன்மாக்கள் பக்குவப்பட்டன; "வடுத்தனை நீத்து அம்கனகமாயின"; "குறமாதரும் மாதவத்தோர்களும் அங்கு அவண் அடுத்து இகமுறு போகமும் இன்பர போகமும் எய்திச்" சிறந்தனர்.

கி.பி. 1291 – 1342 வரை திருவண்ணாமலைப் பகுதியை ஆட்சிபுரிந்துவந்தவன் மூன்றாம் வீரவல்லாள தேவன்.[3] நம் குருமூர்த்தியின் காலத்தில் வாழ்ந்த இவன், ஒருநாள் புரவி ஏறி உலாவந்தபோது, அது திடீரென்று நுரைகக்கிக் கீழே வீழ்ந்துபட்டது. அதனை எழுப்பித்தர அவன் வணங்கி வேண்ட, இவர் எழுப்பித் தந்ததும், அரச மரியாதைகளுடன் இவரை அவன் அரண்மனைக்கு அழைத்துச் சென்றதும், அங்கு அவன் மகனின் நோய் தீர்த்ததும் ஆகிய செய்திகள், காலத்தால் அழியாத இவரது கருணையை உணர்த்துவன. இதனைத் திருவண்ணாமலை அண்ணாமலையார் திருக்கோயில் தெற்கு மதில் சுவரில் 8 புடைப்புச் சிற்பங்களாக அமைந்துள்ள சிற்பவரிசை நமக்கு அங்கை நெல்லியாக்குகின்றன.

இவர்காலத்தில் வாழ்ந்திருந்த "விசிட்டாத்துவிதியரும்" இவரைத் தொழுதற்குவந்த சிறப்பை இந்நான்மணிமாலையில் 35–ஆம்செய்யுள் எடுத்தியம்புகிறது.

இங்ஙனம் கல்லார்க்கும் கற்றவர்க்கும் கண்ணளிக்கும் கண்ணாகவும், வல்லார்க்கும் மாட்டார்க்கும் வரமளிக்கும் வரமாகவும், எல்லார்க்கும் பொதுவில் நின்ற இவர்கள், ஏறத்தாழ கி.பி.

1310–இல்[4] நம் திருமடத்தைத் திருவண்ணாமலையில் தோற்றுவித்து ஞானோபதேசம் வழங்கி அருள்புரிந்து வந்தார்கள்.

அவரவர் பக்குவ நிலைக்கேற்ப இவர் அருள் வழங்கிய நிலையை

. . . . . . . . . . . செய்வகை இல்லாப்
பாலர் வாவீசர் மாதர் போகியர்என்று
என்போ லியர்க்கும் இருங்கதி வேண்டிச்
சிலநிர்ப் பீச தீக்கையும் செய்தி
பெரியோர் பெறும்பேறு எளியோரும்எய்தலின்
நின்பெருங் கருணை நீர்மை கண்டு
அன்பி லேன்நின் அடிபணிந் தேனே

*– ஸ்ரீ.தெ.நா. 31*

என்று அருட்திரு குமாரசாமி முனிவர் போற்றுகிறார்.

நம் குருமூர்த்திகள் ஏறத்தாழ கி.பி. 1325–இல்[5] (தமது எழுபத்தைந்தாம் அகவையில்) தம் அணுக்கச் சீடருள் தலைமணியாய் விளங்கிய தாண்டவராய தேசிகரிடம் திருமடத்தின் ஆட்சிப்பொறுப்பை ஒப்படைத்தார்; தம் திருவுளப்படி ஆவணி பூரட்டாதியில் சிவயோகநிலை கூடினார்.

இவர்கள் சிவயோக நிலை கூடிய அந்த இடம் திருவண்ணாமலை – வேட்டவலம் சாலையின் தென்புறம் அமைந்துள்ளது. அந்த ஞானத்திரு இடம் இன்றைய 45–ஆவது குருமகா சந்நிதானம் அவர்களால் பொலிவார்ந்த திருக்கோயிலாக அமைக்கப்பெற்று 2–9–1990–இல் திருக்குட நன்னீராட்டுச் செய்யப் பெற்று ஆன்ம ஈடேற்றம் நல்கி, அருள்ஒளி பரப்பி வருகின்றது.

---

1. குன்றக்குடி திருக்கைலாய பரம்பரை அருணை ஆதீனக் குருபரம்பரை அகவல் – அடி. 51–57

2, 4, 5. குன்றக்குடி திருக்கயிலாய பரம்பரைத் திருவண்ணாமலை ஆதீன வரலாறு. – பக்கம்; 10

3. பிற்காலச் சோழர் வரலாறு – பண்டாரத்தார். (1974)

## முதற்பதிப்பின் சிறப்புப்பாயிரம்
## திருவாவடுதுறை ஆதீன வித்துவான்
## அருள்திரு ஆறுமுகசுவாமிகள் அவர்கள்
## இயற்றியருளியது

*சர்வசித்து – வைகாசி. (1887 – மே, சூன்)*

1. கல்லாலின் மோனமுற்(று)அன்(று) எல்லாமும்
உணர்ந்தவர்க்குக் காட்டும் ஒன்றைத்
தொல்ஆகமத்(து)அடைவே பல்லாரும்
நன்(கு)உணரச் சொல்வான் எண்ணி
மல்ஆரும் மதில்புடைசூழ் திருவண்ணா
மலையில்அருள் வடி(வு)ஒன்(று) ஏந்தி
நல்லார்கள் தொழப்பொலியும் தெய்வசிகா
மணிக்குரவர் நாதன் தாளில்

2. மனம்மொழிமெய் அவனடிக்கே உறுத்திஅருள்
ஒருங்குபெற்ற வரதன் சைவத்
தனம்எனும்சித் தாந்தகலை தெளிந்துநிட்டை
கைவந்த தகையன் ஒட்டின்
கனம்உறுபொன் னும்கருதும் துறவினன்ஆ
ரியனையன்றிக் கனவி னும்வே(று)
உனமருவா உளக்குமர சாமிமுனி
வரன்எமக்கும் உறுதி ஓர்ந்து

3. உளம்நிறைந்த சிவானந்தம் உவட்டெடுத்து
வழிந்ததென உரைப்ப தன்றி
வளம்நிறைந்த வே(று)உவமை யாம்எடுத்துப்
புகலஒணா மகத்து வம்சால்
கனம்நிறைந்த பிறந்தையறுத் திடுஞான
அந்தாதி கருது வார்உள்
குளம்நிறைந்த நான்மணிமா லையும்சாத்தி
அருள்புணரி குளித்தா னன்றே

4. அன்னவற்றின் அருள்நயமும் பொருள்நயமும்
சொல் நயமும் ஆர்ந்து தேக்கி

மன்னுலகில் புலவர்களும் புதுவிருந்தாச்
செவிவாயால் மாந்து மாறு
தன்நிகரில் அனையதெய்வ சிகாமணித்தே
சிகன்மரபு தனக்(கு)ஓர் பானு
என்னஉரை தரஅமர்வோன் கருணைஒரு
வடிவெடுத்தா லேய்க்கு மெய்யான்

5. எத்தகைவாய் வல்லாரும் வார்த்தைஒன்றில்
உளம்உருக இனிது பேசும்
உத்தமன்நற் கொடையினரின் முன்நிற்போர்
அவன்கரத்தால் உணர்மா ணாக்கர்
தத்(து)அருவிக் கொடுங்குன்றத்(து) அமர்ந்(து)எதிர்ந்தோர்
வினைசாடும் சதுரன் ஞான
வித்தகன்நல் ஆறுமுக தேசிகன்அச்
சிடுவித்து விளக்கு கென்ன

6. அன்னவன்கட் டளைசிரமேல் கொண்(டு) எழுத்துப்
பிழையறநன்(று) ஆராய்ந்(து) என்றும்
இன்னல்தவிர் எழுதாத எழுத்தின்இயை
வித்தனன்மற்(று) இவன்யார் என்னில்
என்னவளம் உலகில்உள அவைமுழுதும்
ஒருங்(கு)இயைந்த யாழ்ப்பா ணத்து
மன்னுபுலோ லியம்பதியில் கார்காத்த
வேளாளர் மரபில் வந்தோன்

7. இலக்கியமும் இலக்கணமும் வரம்புகண்டோன்
ஞானகலை எளிதில் சங்கை
விலக்கிஅறிந் தவன்புலவர் மெச்சிடநற்
பிரசங்கம் விரித்துச் செய்வோன்
நலக்(கு)இயைந்த நல்லொழுக்கும் எமக்(கு)இயைந்த
பெருநட்பும் நன்று வாய்ந்தோன்
வலக்(கு)இயைந்த புகழ்உலகின் நிறுவுதில்லை
நாதநா வலவன் தானே

---

# ஸ்ரீ தெய்வசிகாமணி நான்மணிமாலை

## காப்பு

*பண்: நட்டபாடை* *(கம்பீரநாட்டை)* *சுத்தாங்கம்*

தேன்மணி மாலையொடும் தெய்வ சிகாமணிமேல்
நான்மணி மாலை நயந்தணிய – மேன்மணிக்கேழ்
வட்கருணைக் கோன்மிடற்றில் வான்தமிழோ(டு) ஈன்றசிறு
கட்கருணைக் கும்பமுனி காப்பு.

*குறிப்புரை:*

மேல் + மணி + கேழ் = மேன்மணிக்கேழ் = மேலான மணியை ஒத்த. வள் + கருணை = வட்கருணை, வளமான கருணை. கோன் = சிவபெருமான். சிறுகட்கருணை = சிறுமை + கண் + கருணை = சிறுகண்ணில் கருணை நிறைந்த. கும்பமுனி = (யானை) மத்தகமுடைய விநாயகப் பெருமான்; மணமாகாதவராதலின் முனி என்றார்.

மேன்மை, வற்றாமுற்றா இயற்கைஒளி இவை மணிக்கும் கருணைக்கும் பொது. "மேன்மணிக்கேழ்" என்பதனை மேன் (மையுறுசெம்) மணிக்கேழ் (நிறம்) வட்குஅருணைக்கோன் என்று கோனுக்கும் (பெருமானுக்கும்) மேன் (மையுறு நீல) மணிக்கேழ்வட்கு அருணைக் கோன் மிடறு என்று மிடற்றுக்கும் அடையாக அமைப்பினும் அமையும்.

## 1. நேரிசை வெண்பா

*பண்: நட்டபாடை* *(கம்பீரநாட்டை)* *தாளம்: ரூபகம்*

பூமலி செங்காவி பூத்ததடம் போல் அருணைத்
தேமலி தேவ சிகாமணியே – ஏமச்
சகிதாதி கும்பகாந் தத்தேசில் சத்திச்
சகிதாதி போகம் தரும்.

*குறிப்புரை:*

பூ = பொலிவு, செங்காவி = செங்குவளைப்பூ. தடம் = குளம். அருணைத்தேமலி = திருவண்ணாமலைத் தெய்வத்தின் (அண்ணா மலையார்) திருவருள் மலிந்த. ஏமச்சகிதாதி = ஏமம் + சகிதம் +ஆதி = திருநீறு அணிந்த கடவுள். கும்பகாந்தத்தேசில் = கும்பம் + காந்தம் + தேசில் = நூறுகோடி மடங்கு ஒளி அழகினால். சத்திச்சகிதம் = ஆற்றலோடு கூடிய. ஆதிபோகம் = இறையின்பம்.

தேவசிகாமணியே தரும் என்று கூட்டுக. ஏகாரம் தோற்றம்.

சத்திச் சகிதாதி போகம் என்றதனால் இம்மையாற்றலும் மறுமை இன்பமும் குறித்தார்.

சத்தியோடு கூடிய ஆதி (அம்மையப்பன் தரும்) போகம் தரும் எனினும் அமையும். குரு, இலிங்க, சங்கம வழிபாடுகளில் முதன்மையானது குருவழிபாடே.

பூத்ததடம் – திருவண்ணாமலை. செங்காவி – தெய்வசிகாமணி தேசிகர் – இப்பாடல் உவமையணி. முதலிரண்டடிகளில் எதிர் நிரல் நிறையணியும் அமைந்துள்ளது.

## 2. கட்டளைக் கலித்துறை.

*பண்: கௌசிகம்* *(பைரவி)* *தாளம்: ரூபகம்*

தருமாதி மூன்று சமுத்திரம் நீந்தித், தடைபூரிந்த
கருமாதி மூன்று மலைநீங்கி, முக்குணக் கா(டு) அகன்றே
அருமாதி மாயை அடைத்த கபாடம் அகன்(று) உறலாம்
திருமா(து) இயல்அரு ணாசலத் தேவ சிகாமணியே.

*குறிப்புரை:*

தருமாதி மூன்று = தருமம் + ஆதி + மூன்று = அறம், பொருள், இன்பம். (இவற்றைச் சமுத்திரம் என்றது நீந்திக் கடத்தற் அருமை நோக்கி). மூன்று கருமாதி மலை என்று கூட்டுக. மூன்று கருமம் ஆதி மலை = மனம் வாக்கு காயத்தால் ஏற்படும் வினையாகிய மலை, நீங்கி = விலகி. முக்குணக்காடு = ச்த்துவம், இராசதம், தாமதமாகிய காடு. அருமாதி மாயை = அருமை + ஆதி + மாயை = கொடிய ஆதி மாயை. அருமையான விடம் என்றாற்போல ஈண்டு அருமை கொடுமை

குறித்தது. கபாடம் = கதவு. உறலாம் = திருவருளைப் பொருந்தலாம். திருமாது இயல் = திருமகள் தங்கிய தேவசிகாமணியாலேயே நீந்தி, நீங்கி, அகன்று உறலாம் என்று கூட்டுக. இப்பாட்ல் ஏகதேச உருவகவணி: அகன்று என்பது செயவெனச்சத்திரிபு.

## 3. நிலை மண்டில ஆசிரியப்பா

*(இராகமாலிகை)*

மணியினம் குயின்றெனு அணிமலர் பொதுளிய
பத்திரப் பைம்பொழில் சித்திரப் படாம்சூழ்
அன்னம் பொலிந்த நன்னெடும் சிகரக்(கு)
அன்னசா லைகளும் கன்னகூ டமுமாய்
அருவித் தொங்கல் மருவித் தூங்க

மாமுடித் தீப மணிக்குடம் தாங்கித்
தீபத் தால்முகில் செவ்வான் ஆகித்
தங்கத் தகட்டிற் பொங்(கு)ஒளி பரப்பத்
தடந்திகழ் கொடிஞ்சி நெடுந்தேர் போலும்
திருஅரு ணாசலக் குருஅருணா சலச்

சைவ சிகாமணி தெய்வசி காமணி
அமேயம் அநிச்சயம் அநௌபமம் அனாமயம்
சூக்குமம் சருவகம் நித்தியம் துருவம்
அவ்யயம் ஈசம் அதீந்தியம் சூன்யம்
நிர்க்குணம் என்று நிகழ்கா ரணப்பெயர்

அந்தமஇ லாமையால் அமேயம் ஆயும்
அமர்இடம் இன்மையின் அநிச்சயம் ஆயும்
அதுலம் ஆதலின் அநௌபமம் ஆயும்
அமலம் ஆதலின் அனாமயம் ஆயும்
சூழல் இன்மையிற் சூக்குமம் ஆயும்

தான்வியா பகத்தான் சருவகம் ஆயும்
நிட்கா ரணத்தால் நித்தியம் ஆயும்

சேர்ஆசை இன்மையின் துருவம் ஆயும்
அறிபூ ரணத்தால் அவ்வயம் ஆயும்
இறைமை எய்தலின் ஈசம் என்றும்

அரும்பசி தாகம் அளந்(து)அறி வதுபோல்
அறி(வு)அரி(து) ஆகும் அதீந்தியம் ஆயும்
சேர்சடம் அல்லது சித்(து)உரு ஆதலின்
சோர்(வு)இ லாத சூனியம் ஆயும்
வீங்கு சாத்துவிக விந்து வைந்தவம்

நீங்கநின் றமையால் நிர்க்குணம் என்றும்
சத்(து)ஆ மாத்திரம் ஆம்தனிப் பொருளைக்
காரகம் என்னும் பாரமத்(து) இட்டு
நெய்போல் முத்தியின் எய்தநீ செய்த
நன்றிக்(கு) எதிர்செய் யேன்இச் சித்தே.

## குறிப்புரை:

மணியினம் = நவமணிக் கூட்டம். குயின்றென = பதித்தாற்போல. பொதுளிய = தழைத்த, நெருங்கிய. பத்திரம் = இலைதழை. பைம்பொழில் = வளமான சோலை. சித்திரப்படாம் = ஓவியத் திரைச்சீலை. அன்னம் = அன்னப்பறவை, சோறு. சிகரக்கு = உச்சியில், உச்சியினையுடைய. அன்னசாலை = வெளிமண்டபம் (வெளிச்சுற்று), சத்திரம். கன்னகூடம் = இறை எழுந்தருளியிருக்கும் நடுவிடம், பெருமைமிக்க கோயில் மன்றம். தொங்கல் = மாலை. மருவி = பொருந்தி. தூங்க = தொங்க, இறங்க. மாமுடி = பெரிய தேரின் உச்சி, திருவண்ணாமலையின் உச்சி. தீபமணிக்குடம் = தீபம் போன்ற அழகிய கலசம், தீபம் தாங்கிய அழகிய குடம். தீபத்தால் = சுடரும் ஒளியால், திருவண்ணாமலைத் தீபத்தால். முகில் = மேகம். தகட்டில் = தகடு போல. தடம்திகழ் = பெருமை விளங்கும். கொடிஞ்சி = (தாமரைப்பூ வடிவில் செய்து தேரின் முன்னே அமைக்கும்) தேர்மொட்டு. சிகாமணி = முதல்வன். அந்தம் = முடிவு. அமேயம் = அளவிடற்கரியது. அமர்இடம் = விரும்பும் இடம். அநிச்சயம் = இனைத்து என்று உறுதி செய்யப்படாத தன்மையுடையது. அதுலம் = ஒப்பற்றது. அநௌபமம் = ஒப்புமை இல்லாதது. அமலம் = குற்றமற்றது. அனாமயம் = முழுநல வடிவுடையது. சூழல் = சுற்றுப்புறம். சூக்குமம் = நுண்மையுடையது. தான் வியாபகத்தால் =

தானே பரவியிருப்பதால். சருவகம் = அனைத்தையும் அடக்கியிருப்பது. நிட்காரணம் = மூலமற்றதன்மை. நித்தியம் = என்றுமுளது. சேர்ஆசை = சேரும் திசை. துருவம் = அசையா நிலையுடையது. அறிபூரணம் = முற்றும் உணர்தல். அவ்யயம் = முதன்மை. இறைமை = முதன்மை. ஈசம் = குருவாம் தன்மையுடையது. அறிவு அரிதாகும் = அளந்து அறிதற்கு அரிதாகிய. அதீந்தியம் = துறவுநெறியுடையது. சடம் அல்லது = அறிவற்றதல்லாததான. சோர்வு இலாத = தளர்ச்சி இல்லாத, குறைவற்ற. சூனியம் = பொறி, அறிவுடையது. வீங்கு = மிகப் பெரிய. சாத்துவிக விந்து வைந்தவம் நீங்க = நன்மையே நோக்கும் குணமுடைய விந்து தத்துவம், சுத்தமாயை நீங்க. நிர்க்குணம் = குணமற்றது. சத்து ஆமாத்திரம் ஆம் = ஞானவடிவான குருத்தன்மை கொண்டதான. தனிப்பரம்பொருள் = சிவபரம்பொருள். காரகம் = தீட்சானுக்கிரகம், தீக்கையருளுதல். பாரமத்து = கனமான மத்து. நெய்போல் முத்தியின் எய்த = நெய்போன்று விளங்கும் முத்தியினால் அடைய. நன்றி = உதவி, அருளிப்பாடு. எதிர் செய்யேன் = கைம்மாறு செய்யவல்லேனல்லேன். இச்சித்து = விரும்பியும் கூட.

சோர்விலாத சித்துரு ஆதலின் சூனியம் என்று கூட்டுக. பாலைக் காய்ச்சித் தயிராக்கி முறுக வாங்கிக் கடைந்து வெண்ணெய் பெற்று உருக்கி நெய் பெறுதல் வழக்கு. இப்பாடுகள் படாமல் உமது தீட்சானுக்கிரகத்தால் எடுத்த எடுப்பிலேயே நெய்(முத்தி) பெற்றேன் என்ற அருமை புலனாம். மணியினம் . . . தேர்போலும் – உவமையணி

**விளக்கம்**

| | |
|---|---|
| தேர் | – அருணை |
| சித்திரப்படாம் | – பைம்பொழில் |
| அன்னப்பறவைஉரு | – அன்னம் (சோறு) |
| அன்னசாலை (வெளிச்சுற்று) | – சத்திரம் |
| கன்னகூடம் (நடுவிடம்) | – பெருமைமிக்க கோயில் மன்றம். |
| தொங்கல் (மாலை) | – அருவி. |
| ஒளிக்கலசம் | – தீபம். |
| கலசத்தால் வான் செவ்வானாதல் | – தீபத்தால் வான் செவ்வான் ஆதல். |
| அன்னம் பொலிந்த.... செவ்வான்ஆகி | – சிலேடையணி |
| தீபத்தால் முகில் செவ்வான் ஆகி | – தற்குறிப்பேற்ற அணி. |

## 4. அறுசீர் கழிநெடில் ஆசிரிய விருத்தம்.

இராகம் : மோகனம் சுத்தாங்கம்

சித்துரு அருணைத் தேவ சிகாமணிச் சித்து; வாரி
நத்துரு; வலஞ்சூழ் அந்த நத்தினுள் உதித்த நல்ல
முத்துரு; முத்தர் வேண்டின் முத்தி நன்(கு) உதவும்போது
சத்துரு ஆகும் பாசம் தனக்கும் மா தவர்க்கும் தானே.

*குறிப்புரை:*

சித்துரு = சித்து + உரு = ஞானவடிவம். வாரி = கடல். நத்து = வலம்புரிச் சங்கு. முத்தர் = சீவன் முத்தர். சத்துரு = பகை வடிவம். சத்து + உரு = மெய்ப் பொருள் வடிவு. முத்தர் வேண்டின் முத்தி நன்கு உதவும் போது சத்து + உரு; பாசம் தனக்குச் சத்துரு; மாதவர்க்கும் சத்து + உரு என்று அமைத்துக் கொள்க.

குருமூர்த்தி வடிவமே பாசத்திற்குப் பகை என்பதால் அவர் பகையாதல் பெறப்படும். இப்பாடல் உருவகவணி. "சத்துரு" என்றது பொதுமொழியாம்.

## 5. நேரிசை வெண்பா

*பண்: திருக்குறுந்தொகை (ஆபேரி) தாளம்: ஆதி*

தானே தனக்(கு) இணையாய்த் தாவில்அரு ணாசலமாய்
ஞானமய மாகியே நன்றாகி – வானோரும்
சேவிக்கும் தேவ சிகாமணியை யேதரித்தால்
ஆவிக்(கு) அலங்கார மாம்.

*குறிப்புரை:*

தாவில் = கேடற்ற. தரித்தால் = மனத்தில் அணிகலனாகப் பூண்டால். ஆவி = உயிர். அலங்காரம் = அழகு. தேவசிகாமணியையே = ஏகாரம் தேற்றம்.

## 6. கட்டளைக் கலித்துறை

*பண்: சாதாரி* *(பந்துவராளி)* *தாளம்: செம்பை*

ஆமாம்புன் மாயை அடைத்துநன் மாயை அதனுள் ஒரு
பூமா நிலமென்று போட்(டு) உர மாக்கிப் புரந்(து) அணுவை
மாமா விதையென வைத்ததெல் லாம்வள மாம் அருணைப்
பாமாலைத் தேவ சிகாமணிச் சோதிப் பயிர்செய்யவே.

**குறிப்புரை:**

புன்மாயை = கீழான மாயை. அடைத்து = வேறாக ஒதுக்கி. நன்மாயை = நலந்தரும் மாயை. பூ = பிறப்பு, உடம்பு. மா = பெருமை. போட்டு = ஒதுக்கி வைத்து. உரமாக்கி = ஊக்கமுடையதாக ஆக்கி. அணுவை = உயிரை. மாமாவிதை = மிகச் சிறந்த வித்து. அணுவை, மாமாவிதையென உரமாக்கிப் புரந்து வைத்தது பயிர் செய்யவே ஆம் ஆம் என்று கூட்டுக. இப்பாடல் முற்று உருவகவணி.

## 7. நேரிசை ஆசிரியப்பா

*(இராகமாலிகை)* *சுத்தாங்கம்*

செய்ய சிந்தூரச் செழுநதிக் கிடந்தங்(கு)
ஓர்பதி னறுநான்(கு) உகத்தினும் விளைந்த
உதயா சலமணி சிதையமேல் விளங்கும்
திருவரு ணாசலத் தேவசி காமணி
அருணாச லேசமில் அருணாச லேசன்

குருபரன் பால குமரன் விருத்தனென்(று)
ஒருவன் எய்தும் பருவம் போலப்
பொருந்தும் இலய போகாதி காரம் என்(று)
இருந்(து)இயல் செய்தி இயம்பலோ அரிதே.
இருபரு வம்தன் னிடத்துநீங் காத

ஒருபரு வத்தின் உதாசீனன் அரூபி
தான்ஒரு பொருளைத் தான்விரும் பாமல்
ஆன்மா விளங்கும் அரும்பமன் நோக்கி
ஆன சுபாவத்(து) அனைவரும் உறங்கினும்
தான்உறங் காத தனிக்குடி வாழ்க்கையில்

ஞான மாத்திரம் ஆன போதும்
ஆக்கிய மாயா சத்தி வியத்தி
யோக்கியப் பார்வை உயர்படைப்(பு) ஆகவும்
சேர்தரு மாயே யம்திதி யோக்கியப்
பார்வை தானே பகர்திதி ஆகவும்

கன்ம பரிபா கம்படச் செய்தல்
அன்மைஇ லாச்சங் காரம் ஆகவும்
திகழ்மலம் செலுத்தல் திரோதம் ஆகவும்
கிளர்கா ரகம்அனுக் கிரகம் ஆகவும்
நினைவால் ஐந்தொழில் நிகழ்த்தும் திதியில்

தேசிகர் யோசனை செய்யினும் சிவத்துவம்
ஏசி லாதுறும் இலய தானத்(து)
இலயா வத்தையின் இலங்கிய சோதியை
மலை(வு)அற உரைப்பின் வானினும் பெரிதே.
இன்மையின் மனோலயம் எய்துவர்

சின்மயத் தோர்தினம் சிந்தனை செய்தே.

## குறிப்புரை:

செய்ய = செம்மையான. செழுநதி = வளமான ஆற்றில். கிடந்தங்கு = கிடந்தாற்போல. ஓர்பதினறு நான்கு உகத்தினும் = 64 கலை ஞானங்களின் முடிவிலும். விளைந்த = நிலைத்த. உதயாசலமணி = உதய + அசல + மணி = உதயமலை ஞாயிறு. சிதைய = ஒளி கெட. மேல் விளங்கும் = மேம்பட்டு விளங்கும். "செய்ய சிந்தூரச் செழுநதிக் கிடந்தங்கு உதயாசலமணி" என்றும் "ஓர் பதினறு நான்கு உகத்தினும் விளைந்த திருவருணாசலம்" என்றும் கூட்டுக.

அருணாசலேசமில் = அருள் + நாசம் + லேசம் + இல் = அருள் வழங்குவதில் கேடோ அற்பத்தனமோ இல்லாத. குருபரன் = பரமகுரு ஆவான். இலய போக அதிகாரம் என்று இருந்து = ஆன்மாக்களை ஒடுக்குகிறவராகவும், துய்க்கச் செய்கிறவராகவும், காப்பராகவும் இருந்து. இயல்செய்தி = அருளும் செயல். இருபருவம் = மானிடப்பகுதி, தெய்வப்பகுதி. ஒரு பருவத்தின் = மானிடப் பகுதியிலேயே. உதாசீனன் = இல்லறத்தான். அரூபி = சிவன் ஆவான். நோக்கி = நோக்குகின்றவன் ஆவான். அனைவரும் உறங்கினும் = ஐந்தொழில் புரியும் கடவுளர் ஐவரும் வாளாவிருந்தாலும். தனிக்குடி வாழ்க்கையில் = ஒப்பற்ற இல்லற வாழ்க்கையில். ஞானமாத்திரம் ஆன போதும் = தான் ஞான நிலையில் மட்டுமே இருப்பினும். ஆக்கிய = தான் ஆக்கிய. மாயா சத்தி வியத்தி = மாயையின் காரியமான. யோக்கியப் பார்வை = நலம் தரும் அருள் நோக்கு. மாயேயம் திதி = மாயையால் ஆகிய உடம்பு முதலியவற்றைக் காக்கும் நிலை. கன்மம் = இரு வினை. பரிபாகம்பட = பக்குவம் பெற. அன்மையில்லா = தீங்கற்ற. சங்காரம் = அழித்தல். மலம் செலுத்தல் = மலம் துய்க்கச் செய்தல். துரோதம் = மறைப்பு. அனுக்கிரகம் = அருளுதல். திதி = நிலைமை. தேசிகர் = ஒளிவடிவமான குருமூர்த்தி. இலயதானத்து = ஒடுங்கும் இடத்தில், இலய சிவனிடத்தில். மலைவு அற = மயக்கமற. வானினும் = அவர் பெருமை வானத்தை விட. இன்மையின் = மலமின்மையால் சிந்தனைசெய்து, குருமூர்த்தியையே சிந்தித்து. மனோலயம் = மனம் ஒன்றிய நிலை. சின்மயத்தோர் = ஞானிகள்.

தெய்வசிகாமணியே அருணாசலேசன்; குருபரன். இவர் ஐந்தொழில் நிகழ்த்துகிறார். இவரைச் சிந்தனை செய்யும் ஞானிகள் மலமின்மையின் மனோலயம் எய்துவர் என்க.

## 8. அறுசீர்கழிநெடில் ஆசிரியவிருத்தம்.

*பண்: திருக்குறுந்தொகை (சண்முகப்பிரியா) சுத்தாங்கம்*

செய்ய சீர்அரு ணாசலத்
தேவசி காமணிச் செழுஞ்சோதி
ஐய னேசெயும் ஐந்தொழி
லையும்விளை யாட்டென்பர் அறியாதார்;
கைய தாகிய காரணம்
கரணம் ஓர் காரியம் பயனல்லால்

பையல் செய்தொழில் பரமகா
ரணர்செயார் பகர்வது பரிவன்றே.

*குறிப்புரை:*

செய்ய = செம்மையான, ஐயனே = தலைவன் தானே. ஐந்தொழில் = படைத்தல், காத்தல், அழித்தல், மறைத்தல், அருளல் என்பன. கையதாகிய = ஆற்றல்மிக்க. கரணம் = மனம், புத்தி, சித்தம், அகங்காரம் என்பன. காரணம் கையதாகிய கரணம் என்று கூட்டுக. பையல் = சிறுவர், அற்பர். பரமகாரணர் = தேவசிகாமணி. பரிவன்றே = அன்பினாலன்று – மெய்யேயாம். ஐயனே = ஏகாரம் தேற்றம்; பிரி நிலையுமாம்.

சிறுவர் செயலே விளையாட்டு. பரம காரணர் – தேவசிகாமணி செயல் ஐந்தொழிலே, விளையாட்டன்று என்க.

## 9. நேரிசை வெண்பா

*பண்: காந்தாரம்* (செஞ்சுருட்டி) *தாளம்: சாப்பு*

அன்றன்று முந்நூற்(று) அறுபத்து முச்சமயத்(து)
ஒன்றன்று வெவ்வே றுளமுத்தி – நன்(று) என்ற
சித்தாந்த மாம் அருணைத் தேவ சிகாமணிசெய்
சுத்தாத்து வைதச் சுகம்.

*குறிப்புரை:*

அன்றன்று = அதுவன்று. முந்நூற்று அறுபத்து முச்சமயம் = 363 சமயங்கள். ஒன்றன்று = கூறப்பெறுவதன்று. வெவ்வேறு உள = முத்திப் படிநிலைகள் வேறுவேறு. அவை சாலோக, சாமீப, சாரூபமாகிய அபரம், சாயுச்சியம் ஆகிய பரம் என்பனவாம்.

நன்று = அருள், இன்பம். சித்தாந்தம் = முடிந்த முடிவு. செய் = அருளிய. சுத்தாத்து விதச் சுகம் = சுத்த + அத்துவித + சுகம் = தூய அத்வைதமாகிய பேரின்பம். அத்துவிதம் = இரண்டன்மை. பரமான்மாவும் சீவான்மாவும் இரண்டற்ற நிலை.

நன்று என்ற . . . அருணைத் தேவசிகாமணி செய் சுகம் – முத்தி–முந்நூற்று அறுபத்து முச்சமயத்து ஒன்றன்று அன்றன்று என்று கூட்டுக.

## 10. கட்டளைக் கலித்துறை

*இராகம் : தோடி* *சுத்தாங்கம்*

சுகம்எறிந் தேகுற மாதரும் மாதவத் தோர்களும் கண்
அகம்உறும் தேவ சிகாமணி யால் அங்(கு) அவண் அடுத்தே
தகவுறைந்(து) ஐவனம் காத்(து) அருணாசலச் சாரலிலே
இகமுறு போகமும் இன்பர போகமும் எய்துவரே.

### குறிப்புரை:

சுகம் எறிந்தே = தற்சுகம்விட்டு. குறமாதர் = குறப்பெண்டிர். கண்அகம் உறும் = தம் கண்ணாரக் கண்டு உள்ளத்தில் நிறையும். அங்கு = திருவண்ணாமலைக்கு. அவண் = தேவசிகாமணி பால். அடுத்து = வந்து சேர்ந்து. தகவுறைந்து = தம் நெறிக்குத் தக்கவாறு ஒழுகி. ஐவனம் காத்து = மலை நெல் காத்து. இகமுறு போகம் = இவ்வுலகில் பெறத்தக்க இன்பம். இன்பர போகம் = இனிய வீட்டுலக இன்பம். குறமாதர் தேவசிகாமணியால் அங்கு சாரலில் அடுத்து தகவுறைந்து ஐவனம் காத்து இகமுறு போகமும் எய்துவர் என்றும், மாதவத்தோர் தேவசிகாமணியால் அவண் சாரலில் அடுத்து தகவுறைந்து இன்பர போகமும் எய்துவர் என்றும் கூட்டுக. இப்பாடல் நிரல் நிறையணி.

## 11. நேரிசை ஆசிரியப்பா

*(இராகமாலிகை)* *சுத்தாங்கம்*

எய்தரும் காலாக் கினிஎழுந்(து) அடர்ந்த
செஞ்சுடர்ச் சுவாலை விஞ்சு காலத்து
நரகம் முதலா நலம்பெறு சுவர்க்கத்(து)
அளவும் சராசரம் அடங்கலும் தகிக்கும்
பிரதமப் பிரளயம் வரவரும் தோறும்

பிரமா படைப்பப் பிரமகற் பத்தில்
பிரமாண் டத்தில்இவ் இருநிலப் பரப்பே
சத்துவம் ஆகத் தான்முன் பொருந்தலின்
நன்னிலை பிளந்த பொன்னிற அண்டத்(து)
இருகபா லங்கலும் பரமாணு வாகப்

பிரமாண் டாதி பிராக்கிரு தாந்தத்து
இருநால் கண்டமும் வருமுறை பெயர்ந்து
காரியம் தத்தம் காரணத்(து) ஒடுங்க
உய்த்த சீகண்ட உருத்திரர் அருளால்
மத்திமப் பிரளய வகையில் இம்முறையே

ஏழி லக்கத்(து) இருபதின் ஆயிரம்
பிரமர் இறந்திட வருமா லையிலே
முறைபெறு மூர்த்தா மூர்த்தம் ஆகியும்
மறையாத் தந்திர மந்திரம் ஆகியும்
பரவும் பரம பரங்கள் ஆகியும்

மேற்படு சுத்தம் மிச்சிரம் அசுத்தம்என்(று)
ஆர்ப்புறு தத்துவம் ஆ(று)ஆ(று) ஆகியும்
காலாக் கினிமுதல் கருது சிவாந்தம்
பேரா(து) அடுக்கிய பிரக்கிரி யாண்டத்(து)
இருவகை மாயே யங்களும் இடிந்து

காரியம் தத்தம் காரணத்(து) ஒடுங்க
அடுமகாப் பிரளயம் ஆரணி முடிப்பச்
சுத்த காலம் தோன்றிய சமயத்(து)
இலயப் பருவத்து இதம்பெறு பதார்த்தப்
பாலனப் போகர் சீலம் நோக்கில்

இயல்சேர் நியாமிக இச்சா சத்தியும்
ஞாபகம் ஆன ஞான சத்தியும்
உத்தி யோகத்(து) உயர்ந்த கிரியையும்
என்னும் மூவகைச் சின்னம் படைத்து
நால்வகைப் பேருடை மேல்வகை ஒருவன்

அண்ணா மலையின் கண்ஆர் அமுதத்
தேவ சிகாமணித் தேசிகன்
மேவிய செய்கை விளையாட்(டு) அலவே!

*குறிப்புரை:*

எய்தரும் = நெருங்குதற்கு அரிய. காலாக்கினி = ஊழித்தீ. விஞ்சுகாலத்து = அளவில்மிகும்போது. சராசரம் = சரம் + அசரம் = இடம் பெயரும் பொருள்கள், இடம் பெயராப் பொருள்கள். அடங்கலும் = முழுவதும். பிரதமப் பிரளயம் = முதல் ஊழி. பிரமகற்பத்தில் = பிரமனது வாழ்நாளில். பிரமாண்டம் = பெரும் பேரண்டம். சத்துவமாக = ஆற்றலுடையதாக. பிரளயம்வர, வருந்தோறும் பிரம கற்பத்தில் பிரமா, பிரமாண்டத்தில் இவ்விருநிலப்பரப்பேசத் துவமாகத் தான் முன் பொருந்தலின்படைப்ப என்று பொருத்துக. நன்னிலை = இவ்வுலகு. பொன் = அழகு. இருக பாலம் = பிளந்ததால் உண்டான இருபாதி. பரமாணு = அணுவிலும் நுண்ணிய அணு. பிரமாண்ட = மிகப் பெரிய. ஆதி பிராகிருதாந்தம் = முதல் பிரளய முடிவு. இருநால் கண்டம் = எண் திசை எல்லை. பெயர்ந்து = நிலைமாறி. காரியம் = மாயா காரியங்கள். உய்த்த = செலுத்திய திருவுளங்கொண்ட.

"சீகண்ட உருத்திரர் உய்த்த அருளால் காரியம் தத்தம் காரணத்து ஒடுங்க" என்று கூட்டுக. மத்திமப் பிரளயம் = இடையூழி. மாலையில் = இவ்வொழுங்கில். மூர்த்தா மூர்த்தம் = மூர்த்திகளுள் சிறந்த மூர்த்தி. மறையாத் தந்திர மந்திரம் ஆகி = அழியாத முதல் நூல் கூறும் மந்திரமாக ஆகி. பரமபரங்கள் = மேனிலையுடையோர். மேற்படு சுத்தம் = மேலான சுத்த மாயைத் தத்துவம் (5). மிச்சிரம் = கலப்புத்தத்துவம் — வித்யாதத்துவம் (7). அசுத்தம் = அசுத்த மாயத்தத்துவம் (24) ஆக 36 தத்துவங்கள். காலாக்கினி முதல் கருது சிவாந்தம் = ஊழிக் காலம் முதல் சிவத்திடம் உயிர்கள் கலக்கும் வரை. பேராது = நிலை குலையாது. பிரக்கிரியாண்டத்து = பிரக்கிருதி மாயையால் வந்த அண்டத்தில் உள்ள. இருவகை மாயேயங்கள் = இடம் பெயரும், இடம் பெயராப் பொருள்கள். இடிந்து = தன்னிலை கெட்டும். ஆரணி முடிப்ப = ஆரணி என்ற சிவசத்தி முடித்துவைக்க. சுத்தகாலம் = சுத்தமாயா காரிய உற்பத்தி முதலியவைகளுக்குப் பயன்படுத்தும் காலம். இலய பருவத்து = இலயத்திருக்கும் காலத்தில். இதம்பெறு பதார்த்தம் = பக்குவம் பெறும் உயிர்கள். பாலனப் போகர் = பரிபாலித்து இன்பம் துய்க்கச் செய்யும் நம் குருமூர்த்தி. இயல்சேர் = ஒழுங்கு சேர. நியாமிகம் = செலுத்துதல். இச்சாசத்தி = உயிர்கட்கு அருள் நேசம் வழங்கும் சக்தி. ஞாபகமான = அரும்பொருளான. ஞான சத்தி = கருமங்களை அறிந்து ஊட்டும் சத்தி. உத்தியோகத்து = ஊக்குவிக்கும் இயல்புடைய. கிரியாசத்தி = உலகங்களை ஆக்கும் சத்தி.

சின்னம் படைத்து = அடையாளங்களைப் படைத்துக் கொண்டு. நால்வகைப் பேருடை = தெய்வசிகாமணியாகிய சிவம், இச்சாசத்தி, ஞானசத்தி, கிரியா சத்தி என்ற நான்கு வகைப்படும் பெயர் உடைய. மேல்வகை ஒருவன் = மேலாந்தரமுடைய ஒப்பற்ற குருமூர்த்தி. கண்ணார் அமுதம் = கண்ணிறைந்த அமுதமாகிய, கண்காணும் அமுதமாகிய. மேவிய செய்கை = கருணையால் பொருந்திய செயல்கள். விளையாட்டல = அவர் எளிதாய்ச் செய்யினும் எளியனவல்ல. பேரருள் பெருஞ் சிறப்பினவாம்.

சிவமான தெய்வசிகாமணி தேசிகர், பதார்த்த பாலன போகராய், முச்சத்திகளாகவும் இருந்து அருள்புரிவது அவர்க்கு எளிதாயினும், உண்மையில் அருஞ்செயலே என்க.

## 12. ஒன்பதின்சீர் கழில்நெடில் ஆசிரிய விருத்தம்.

*பண்: புறநீர்மை* *(பூபாளம்)* *சுத்தாங்கம்*

வேதாகம ஞானவிபூதிம னோதீதம னோரத மாநிதி
மேதாதிக லாதிசு கோதய மேலான
நாதாதிஅ னாதிபராபர ஞானாதிஅ னாமய பூரண
நானாவித மானச தாசிவ நீள்சோதி
ஆதாரம்ள னாஅரி தேடிய பாதாளம்ள லாம்அடி யாய்நெடி(து)
ஆகாயம்ள லாம்முடி யாய்அயன் ஓரஓர்
சீதாடவி சேர்அருணாசல மீதேயுறை தேவசி காமணி
சீர்பாதம்வி டாதவ ரேகதி சேர்வாரே.

### குறிப்புரை:

ஞானவிபூதி = ஞானச் செல்வன். மனோதீத = மனம் கடந்த. மனோரத மாநிதி = இன்பமாகிய பெருஞ்செல்வன். மேதாதி கலாதி சுகோதயம் = மேதைத்தன்மை முதலியவற்றுக்குக் காரணமான கலைகளின் நற்பிறப்பிடம். மேலான நாதாதி = மேலான பிரணவத்துக்கு ஆதியன். பராபர ஞானாதி = மேலானவற்றுக்கும் மேலான ஞான காரணன். அனாமய பூரணன் = நோயற்ற – முழுநல முழுமையன். நானாவிதமான சதாசிவன் = பல்வகை வடிவு தாங்கிய சதாசிவ மூர்த்தி. ஆதாரம் = திருவடி. அரி = திருமால். முடி = திருமுடி. அயன் = பிரமன். ஓர = உணர. சீதாடவி = சீதம் + அடவி =

குளிர்ந்தகாடு. சீர்பாதம் = சீர்மிகு திருவடி. விடாதவர் = சிக்கெனப் பற்றியவர். கதி = பரமகதி. அரிஅயன் அடிமுடிதேடிய வரலாறு சுட்டப் பெறுகிறது.

## 13. நேரிசை வெண்பா.

*பண்: புறநீர்மை* *(பூபாளம்)* *தாளம்: ஆதி*

சேரியலின் நீள்அருணைத் தேவ சிகாமணிசெய்
காரியம்மே லாகியசற் காரியமே – ஓரில்
விருத்தி பரிணதி விவர்த்தாரம் பத்தில்
பருத்திகலை பால்தயிர்ஒப் பாம்.

**குறிப்புரை:**

சேர் இயலின் = திரண்ட – பருத்த இயல்புடைய. நீள் = உயரமான. மேலாகிய சற்காரியம் = மிக மேலான நற்செயல். ஓரில் = ஆராய்ந்தால். விருத்தி = அவரது நல் ஒழுக்கம், நித்தியயோகம். பரிணதி = கனிந்து. விவர்த்தம் = தன் சுயவடிவுவிடாமல், வேறு வடிவுகாட்டுதல். ஆரம்பத்தில் = பெருமையில். பருத்திகலை, பால்தயிர் ஒப்பாம் = பருத்தியே ஆடையாகவும், பாலே தயிராகவும் பரிணமிப்பதற்கு ஒப்பாகும்.

சுயவடிவு – மானிட வடிவு. வேறுவடிவு – தெய்வவ்டிவு. இப்பாட்ல் உவமையணி.

## 14. கட்டளைக் கலித்துறை

*பண்: பழந்தக்கராகம்* *(ஆரபி)* *தாளம்: ரூபகம்*

பாமாலைத் தேவ சிகாமணி வாழும் பதிஅருணைத்
தூமாலை வெள்ளரு வித்தொங்கல் வாய்க் கண்ட சோலையிற் போய்த்
தேமா மரம் என்று வெவ்வேறு கண்டவர் செய்தியைப்போல்
ஆம்ஆக மத்திற் குணகுணி வாதம் என்(று) ஓதுவதே!

**குறிப்புரை:**

தூமாலை = தூய மாலை போன்ற. வெள்ளருவி = தெளிந்த அருவி. தொங்கல்வாய் = குதிக்கும் – விழும் இடத்தில். செய்தி = செயல். குணகுணிவாதம் = குணத்தால் அக்குணத்தையுடையதன் தன்மையை அறிதல். ஓதுவது ஆம் என்று முடிக்க. சுவைப் பழத்தால், மரத்தின் தன்மை விளங்கும்; அதுபோல் இவர் அருளால், இவர் பெருமை விளங்கும் என்க. இப்பாடல் உவமையணி

## 15. நேரிசை ஆசிரியப்பா

இராகமாலிகை　　　　சுத்தாங்கம்

ஆவதும் அழிவதும் ஆக்குதற்(கு) இடமாம்
தாவில் காரண தத்துவம் கடந்து
மும்முத் திரையுறு முத்தத் துவங்களின்
அம்முத் திரைநிறத்(து) அறிவ தாகியும்
வீ(சு)ஒளி பரந்து வியாபக மாய்நிறைந்(து)

ஈசர்கள் நயன கோசரம் கடந்தும்
ஏழையர் அழைப்பினும் எதிர்மொழி கொடுத்தருள்
அருணா சலம்போல் கருணா லயநிதி
சீர்அரு ணாசலத் தேவ சிகாமணி
இயற்றுதற் கருத்தா என்ப(து) ஆகலின்

அயர்ப்பரும் சத்திகள் ஆம்கர ணத்தால்
ஈ(று)இல் ஐந்தொழில் ஏவும் கருத்தாத்
தூர்ல மானஐந் தொழிலவா யோக்கியச்
சூக்குமம் ஆனஐந் தொழிலின் வழாத
விந்துவை நீங்கா இலய முத்தியும்

விந்துவை நீங்கிய இலய வியத்தியும்
ஆம்தொழில் சாந்தி ஆதிநாற் கலையினும்
சாந்தி அதீதத் தனிக்கலை தனிலும்

இக்கலை ஐந்தா இயல்பரை ஆதியில்
தக்க சிவம்முதல் சாதாக்கி யங்களும்

ஈசானன் ஆதிஐந் தொழில்மூர்த் திகளும்
சேர்ந்த கலப்பின்மந் திரங்கள் ஐந்தும்
ஈசானி ஆதிஐந்(து) இயல்சத் திகளும்என்(று)
அளவில்சத் திகள்இவ் வா(று)உண் டாக
மூர்த்திகள் ஐந்து முடிஐந்(து) ஆக

ஐந்து சதாக்கியம் ஐம்முக மாக
பிரமம் ஐந்தும் திருமேனி யாக
அணிசதா சிவர்ஈ சானரா தியர்கள்
பஞ்சவன் வனத்துறும் பாவனை அதனால்
இந்திரச் சிலைபோ லும்திரு மேனியன்

மறைப்பாற் கோம்பி வடிவெனல் அன்றி
நிறத்தி னாலும் நிகழ்பரஞ் சோதி
இலக்குறும் இலய போகநெய் திரண்டென
உலப்பி லாத ஒருதனி மூர்த்தி
மதுவை ஊட்டிப்பின் வல்வினை தீர்க்கும்

பண்டிதர் போல்அருள் கொண்டசங் கற்பன்
சீமான் வைந்தவ தேகிஎன்(று) உரைக்கும்
சாமான்ய சைவர் சாராக் கடவுள்
இலகிய சுத்த வித்தியா புவனம்
குலவிய சத்த கோடிமந் திரத்துள்

இயல்வச் சிராதியர் இந்திரா தியர்கள்
உயர்நந்தி ஆதியர் உள்ளுறச் சூழ்ந்தே
ஐந்து நான்கு மூன்றாய் எதிராய்
அமர்ந்த மூவகை ஆவர ணத்துள்
ஈசுரத் தினில்அனந் தேசரா தியர்சூழ்

ஆசி லாத்துவி தாவர ணத்துள்
தங்குச தாக்கியம் தன்னில் பிரமம்
அங்கம் முதல்ஆ வரணம் சூழத்
திருமுடி ஐந்தும் திருமுகம் ஐந்தும்
அருள்புரி இதயமும் அங்கம் ஆகக்

கண்கள்மூ வைந்(து)ஒளிர் கன்னம் நாசி
ஒண்கனி வாய்கள்பத்(து) உயர்தோள் கைவிரல்
உரம்த னம்வயி(று) உந்திஊ ருச்சர
னுசங்கம் தாள்பிரத் தியங்கம் ஆக
வெண்மை பொன்மை கருமை செம்மை என்(று)

ஒண்மை நிறங்களும் உள்ளசின் னங்களும்
ஆயுதா திகளும் சாங்கம் ஆக
உடைஆ பரணாதி உபாங்கம் ஆக
நவசத் திகளும் நலங்கொள் முப்பான்எண்
சிவசத் திகளும் சிறந்துடன் இருப்பப்

பொருவில்எண் சத்திகள் புகலாய்ப் பொலிய
ஐந்து நீளமும் ஆ(று)உன் னதமும்
சிறுகல் நான்கும் சிவப்புஓர் ஏழும்
கூர்நேர்மை ஐந்தும் குழிவு மூன்றும்
அகலம் இரண்டும் ஆய்அழ குடனே

அண்ணல் அருள்வடி வான மேனியில்
எண்நான்(கு) என்னும் இலக்கணம் இலங்க
ஈறிலா(து) உயர்ந்த இருதயம் முதலாம்
ஆறுமந் திரங்கள் அடங்கலும் புரக்கத்
தந்திரம் திகழ்சத் யாதிசத் தியந்த

மந்திர சிங்கா சனத்துறை வள்ளல்
தத்துவ மூர்த்தி தனிப்பிர பாவம்என்(று)
உத்தம மாக உயர்திரு உருவன்

அரிபிர மாதியர்க்(கு) அரியர் ஆகிய
யோகா யோகீச் சுரர்க்கும் சாமி

மோகநித் திரையின் முயன்றோர்த் தொடாமல்
எண்கையில் எடுத்த ஈர்எண் கோலால்
விழுப்பம் தோன்ற எழுப்பும் தேசிகன்
ஞானஞா திருவென்(று) ஆனதே யல்லால்
ஏனை வடி(வு)என்(று) இலாத சதாசிவன்

சுத்த மாயைத் துறையைக் கலக்கிச்
சத்தம் அருத்தம் தந்தருள் ஈசன்
மன்னர் பாரமும் மந்திரி தாங்கலின்
இன்ன வா(று)உள ஈசனும் இவ்வழி
நின்ன தாக நிகழ்த்துதல் இன்றேல்

மலமா யாதியில் மறைந்தோர் அவத்தையும்
செறிவுறு தன்னையும் சிவனையும்
அறிவுறும் அறி(வு)எப் படியா வாரே!

## *குறிப்புரை:*

காரணதத்துவம் = ஆவதும் அழிவதும் ஆகியவற்றை ஆக்கு வதற்கு இடமான காலம், நியதி, கலை, வித்தை, அராகம் என்ற ஐந்தும். முத்திரை = அடையாளம். முத்தத்துவம் = சிவ, ஆன்ம, வித்யா தத்துவங்கள். வியாபகம் = பரவியிருத்தல். நயனகோசரம் = கண்பார்வை. கருணாலயநிதி = கருணை ஒன்றிய செல்வம். இயற்றுதற் கருத்தா = சிவன் ஏவ, தான் செயற்படுகிறவர், நம் குருமூர்த்தி. அயர்ப்பறும் = சோர்வற்ற. கரணத்தால் = மனத்தால், நினைப்பு மாத்திரையில். ஈறில் = முடிவற்ற. ஏவும் கருத்தா = பிறரை ஏவிச் செயற்படுத்துகிறவர், நம் குருமூர்த்தி (சிவனை நோக்க இயற்றுதற் கருத்தாவும், பிறரை நோக்க ஏவுதற் கருத்தாவுமாகிறார் நம் குருமூர்த்தி). தூலம் = பொறிகளுக்குப் புலப்படுவது. தூலம் x சூக்குமம். தொழிலவா = தொழில் செய்வனவாகிய. யோக்கிய = ஆற்றல் வாய்ந்த. விந்துவை = விந்து தத்துவத்தை. இலயவியத்தி = இலயித்த காரியம். சாந்தியாதி நாற்கலை = கலைகள் ஐந்தில் சாந்தி, வித்யா, பிரதிட்டை, நிவர்த்தி கலைகள் நான்கும். சிவமுதல்

சாதாக்கியங்கள் = சிவசாதாக்கியம், அமூர்த்தி சாதாக்கியம், மூர்த்தி சாதாக்கியம், கர்த்துரு சாதாக்கியம், கரும சாதாக்கியம். ஈசானன் ஆதி ஐந்தொழில் மூர்த்திகளும் = சதாசிவன், மகேசுவரன், உருத்திரன், திருமால், பிரமன் என்போர். கலப்பின் மந்திரம் ஐந்து = ஈசானம், தற்புருடம், அகோரம், வாமதேவம், சத்தியோசாதம். ஈசானி ஆதி ஐந்து இயல் சக்திகள் = மனோன்மணி, மகேசுவரி, உமை, இலக்குமி, வாணி. முடி = தலை. பிரமம் ஐந்து = மந்திரப் பிரமம், கிரியாப் பிரமம், தத்துவப் பிரமம், பீஜப் பிரமம், முகப் பிரமம். பஞ்சவன்னத்துறும் பாவனை அதனால் = ஐவகை எழுத்துகளில் செய்யும் பாவனையால். இந்திரசிலை = வானவில். திரு = அழகு. கோம்பி = பச்சோந்தி (பன்னிறம் காட்டுவது) உலப்பு இலாத = கேடிலாத. பண்டிதர் = மருத்துவர். சங்கற்பன் = எண்ணம் கொள்கையுடையவர். சீமான் = கடவுளானவர். வைந்தவதேகி = சுத்த மாயையாம் உடம்புடையவர். சத்தகோடி = எழுகோடி. ஆவரணம் = மறைப்பு, கோட்டை. அனந்தேசர் = அனந்த தேவர். துவிகா வரணம் = இரண்டாம் ஆவரணம். அங்கம் = வேதாங்கம். அங்கம் = உறுப்பு. உரம் = மார்பு. ஊரு = தொடை. சங்கம் = கணைக்கால். பிரத்தியங்கம் = துணையுறுப்பு. சாங்கம் = ஒழுங்குடையனவாக. உபாங்கம் = அணியப்படுவன. நவசத்திகள் = வாமை, சேட்டை, ரௌத்ரி, காளி, கலவிகரணி, பெலவிகரணி, பெலப்பிரதமநி, சர்வபூதமநி, மனோன்மணி. சிவசத்திகள் முப்பான் எண் = 38 சிவசத்திகள் பொருவில் எண் சத்திகள் = ஒப்பற்ற எண் சத்திகள் (ஈசானி, பூரணி, ஆர்த்தி, வாமை, மூர்த்தி, ஆரணி வேதயித்திரி, செனனி ஆகியோர்). சாமுந்திரிகம் = உடலுறுப்பு அமைவு இலக்கணம் 32. ஐந்து நீளம் = நகங்கள், கண்கள், மூக்கு, தன் மத்திம பாகம், முழங்கால் ஆகிய ஐந்தும் நீண்டு. ஆறு உன்னதம் = வயிறு, பிடரி, தோள், மூக்கு, மார்பு, நெற்றி இவை ஆறும் உன்னதமாக உயர்ந்திருக்க. சிறுகல் நான்கு. சிறுகல் = சிறுத்திருத்தல், கழுத்து, கணுக்கால், முதுகு, குறி இவை. சிவப்பு ஓர் ஏழும் = கண், உதடு, மோவாய், உள்ளங்கால், உள்ளங்கை, நகம் பீஜம் ஆகிய ஏவும் சிவந்திருக்க. சூர்மை ஐந்தும் = நகம், தோல், கூந்தல், விரல் கணுக்கள், பற்கள் ஆகிய ஐந்தும் நுண்மையன வாய் இருக்க. குழிவு மூன்றும் = முஷ்டி, மணிக்கட்டு, மார்பு மூன்றும் வலிமையுடையனவாய் இருக்க. அகலம் இரண்டும் = மார்பு, நெற்றி இவை அகன்றிருக்க. எண் நான்கும் இலக்கணம் = சாமுந்திரிக இலக்கணம் 32. தந்திரம் திகழ் சத்தி ஆதி சத்தி அந்த மந்திர சிங்காதனம் = வேதமாகிய முதல் நூலில் கூறப்பெற்ற ஆதிசத்திமுதல் அனைத்துச் சத்திகளும் அமைந்த அரியணை. உறை = எழுந்தருளியிருக்கும். பிரபாவம் = புகழ், மகத்துவம். சாமி = கடவுள்,

குரு. மோக நித்திரை = பஞ்ச மாயையில் ஒன்றாய்' விபரீத ஞானம் உண்டாக்கும் மோகத்துயில். தொடராமல் = மோக நித்திரை அறும்படி. எண்கையில் எடுத்த = வலிமையான கையில் ஏந்திய. ஈர்எண்கோல் = நுண்ணிய உறுதியான கோல். விழுப்பம் தோன்ற = மேன்மை உண்டாக. ஞானஞாதிரு = ஞானமயமான ஆன்மா. சத்தம் அருத்தம் தந்தருள் ஈசன் = சந்தஸ் என்ற வேதாந்தமும் அதன் பொருளும் தந்தருளிய இறைவன். இவ்வழி = இவ்வாறு. மன்னர் பாரமும் மந்திரி தாங்கலின் = அரசனின் ஆட்சி பாரத்தை அமைச்சன் தாங்குவது போல. நின்னதாக நிகழ்த்துதலின்றேல் = உன் மூலமாக நிகழ்த்தாவிடில். மலமாயாதி = ஆணவம், கன்மம் மாயைகளில். மறைந்தோர் = முழுகிக்கிடப்போர், ஆன்மாக்கள். செறிவுறு அவத்தையும் = தம்பால் செறிந்துள்ள அவங்களையும் (மூன்றுதளை), பயனற்ற செயலையும். அறிவுறும் அறிவு எப்படி ஆவர் = அறியும் அறிவை எங்ஙனம் பெறுவர்.

(இந்திரச் சிலைபோலும் திருமேனியுடன், சாமுந்திரிகம் 32—ம் அமைய, நலங்கொள் சிவசத்திகள் சூழ இயற்றுதற்கருத்தாவாகவும், ஏவுதற்கருத்தாவாகவும் உள்ள) நின்னதாக நிகழ்த்துதலாலேயே ஆன்மாக்கள் அறிவுறும் அறிவு பெறுகிறார்கள் என்க.

## 16. அறுசீர் கழிநெடில் ஆசிரிய விருத்தம்.

*பண்: திருக்குறுந்தொகை (சண்முகப்பிரியா) சுத்தாங்கம்*

**ஆவா வாமல மானால் அணுவிபு வாமோ ஆகாதே**
**ஓவா(து) அறிவை மறைத்தால் அறிவற்(று) உயிர்என் பதும் உண்டோ?**
**தாவா ஞாதிரு ஞானம் ஞெப்தி தணந்திட லாகாதே**
**தேவா அருணைத் தேவ சிகாமணி தேசிக தேர்வோர்க்கே.**

### *குறிப்புரை:*

ஆஆ = அந்தோ! (இரக்கக் குறிப்பு) ஆ மலமானால் = ஆன்மா மலப்பட்டால். அணு = உயிர். விபு = இறை. அறிவை ஓதுவது மறைத்தால் = உயிரின் அறிவை, மலம் இடைவிடாது மறைக்குமானால். அறிவு அற்று = அறிவு கீழற்றுப்போய். உயிர் என்பதும் உண்டோ = உயிர் எனல் ஆகாது. தாவாஞாதிரு = கெடாத ஆன்மா. ஞானம் ஞெப்தி = ஞானமாகிய அறிவை. தணந்திடல் = பிரிதல். தேர்வோர் = ஆராய்வோர்.

ஆன்மா மலப்படின் இறைஅருள் பெறாது. எனவே அது, இரையருள் தரத்தக்க ஞானமாகிய அறிவைப் பிரிதல் கூடாது என்பதாம்.

தேசிக, ஞாதிரு ஞானம் ஞெப்தி தணவாமல், மலம் மறைக்காமல் இருக்க அருள்க என்பதாம்.

## 17. நேரிசை வெண்பா

*பண்: மேகராகக் குறிஞ்சி (நீலாம்புரி)* சுத்தாங்கம்

கேவல ஆன் மாவைமலம் கிட்டியதன் றேஅருணைத்
தேவ சிகாமணியைத் தீண்டியதோ? – பாவம்
கடிதன்றே! செம்பு களிம்புற்ற தல்லால்
படிகம் கொளுமோ பழுது.

### குறிப்புரை:

கேவல ஆன்மா = ஆணவத்தாற் பிணிப்புண்ட ஆன்மா. மலம் = பிறமலங்களும். கிட்டியது = பிணித்தன. தீண்டியதோ = நெருங்கவும் நெருங்கா. பாவம் கடிதன்றே = தீவினைப் பயன் கடுமையானது. படிகம் = படிகமணி. செம்பு களிம்புறும்; கேவலான்மா மலமுறும்; ஆனால் பழுது கொள்ளாத படிகம் போன்ற குரு மூர்த்தியை மலங்கள் தீண்டாவென்க.

தீண்டியதோ = ஓகாரம் எதிர்மறை. இப்பாடல் எடுத்துக் காட்டுவமையணி.

## 18. கட்டளைக் கலித்துறை

*பண்: மேகராகக் குறிஞ்சி (நீலாம்பரி)* சுத்தாங்கம்

பழுதான கங்குலில் பாயிருள் சீக்கும் பருதிவரும்
பொழு(து)ஆர் இருள்புல ராமல் இராது புகழ் அருணைத்
தொழுதாதை தேவ சிகாமணிச் சூரியன் தோன்றமலம்
முழு(து)ஆர் இருள்புலர்ந்(து) அம்போ ருகக்கண் முகிழ்விள்ளுமே.

### குறிப்புரை:

பழுதான கங்குல் = பிறவற்றைப் புலப்படுத்தாக இருள். பாயிருள் = பரவி வரும் இருள். சீக்கும் = துடைக்கும். பருதிவரும் பொழுது =

ஞாயிறு எழும் போது. ஆர் = நிறைந்த. தாதை = ஞானத்தந்தை. மலம்—முழுது ஆர் இருள் = மலம் முழுதும் நிறைந்த—மும்முல இருள். அம்போருகம் = தாமரை. கண்முகிழ்விள்ளும் = குவிந்து உறங்குவது நீங்கி, மலரும். தாமரை இங்கு ஞானம் குறித்த குறியீடு, மலம் ஆர் இருள் முழுது புலர்ந்து எனினும் அமையும்.

இப்பாடல் வேற்றுப் பொருள் வைப்புஅணி. பின் ஈரடிகள் ஏகதேச உருவம்.

## 19. நேரிசை ஆசிரியப்பா

இராகமாலிகை சுத்தாங்கம்

விள்ளரும் கருணை வெள்ளம் ஆன
உண்ணா முலைப்பெண் உமையொடும் வதிந்து
மாறா(து) உதவும் வசந்தத் தியாகர்
நினை(வு)அருள் புழுகு நெய்ப்பிர தாபர்
வடவா முகமும் வாரியின் மறையக்

காலாக் கினியும் கதிர்ஒளி மழுங்கப்
பகலோன் வடிவம் பகல்மதி ஆகத்
தருபே ரொளிவிளங்(கு) அருணாச லேச
தேவ சிகாமணித் தேவ தேவே.
சிவாகமத் துள்ளே தெரிவ(து) அல்லால்

அவாகமத் துள்ளே அறியாத(து) ஆகி
கேவலம் பஞ்சத் திலேசத்(து) அவிச்சை
போல்விவே கத்திற் போகா(து) ஆகித்
திகழ்இதம் சேராச் செம்பிற் களிம்பும்
கதகம் சேர்ந்த கலன்களும் மணிசேர்

உடலிற் பொல்லா விடமும் போலப்
பயில்சிவ சத்தி பதிந்த காலத்(து)
உயிர்ஒழி யாதுதான் ஒழிவ(து) ஆகிக்
கருவியில் தீர்ந்திடு கட்பட லம்போல்
கிரியா தீக்கையில் கிடைப்ப(து) ஆல்லால்

ஒருஞா னத்தும் ஒழியாத(து) ஆகி
தூமம் காட்டும் புகைபோல் வாஞ்சைசெய்
போகம் காட்டப் பொலிவ(து) ஆகி
ஒருசிவன் போல உயர்சுதந் தரனைப்
பரதந் திரியம் படுத்துவ தாகி

ஆசறு அகசன் ஆகிய அணுவைப்
பாசியன் ஆக்கும் பசுத்துவம் ஆகிப்
பிணிஒன்(று) இல்லாப் பேரறி வோனை
அணுஎன்(று) ஆக்கும் அஞ்சனம் ஆகி
ஒழிவி லா(து) உயர்ந்(து) ஓங்குசிற் சித்தி

விழிதரும் போதில் ஒழிவ(து) ஆகித்
தான்ஒன்(று) ஆகிச் சத்திகள் பலவாய்
ஆன்மாத் தோறும் ஆவ(து) ஆகிப்
பலவகைப் பட்ட இருவகைச் சத்தி
ஒருமல பதார்த்தம் ஒழிப்பதோ அரிதே

தருவா கேசுவரி தருகீழ் அரணியும்
மிருவா கேசுவரர் மேல்அர ணியுமாய்
ஓம்(பு)அழல் உயிராய்ப் போம்புகை மலமாய்
விற(கு)அனல் போல மெய்யறி(வு) உதிப்ப
முறுகக் கடைந்த உறுதி நன்றே

ஐவகைப் புகைஎனும் மலோபாதி நீங்க
இவ்வகை நீசெய் திடாவிடில்
மெய்வகை விற(கு)அனல் வெளிப்படல் உறாதே.

*குறிப்புரை:*

விள்ளரும் கருணை வெள்ளம் = விரித்துக்கூறுதற்கும் இயலாத கருணைப் பெருக்கு. வசந்தத் தியாகர் = சுகம் – இன்பம் தரும் தியாகேசர். நினைவு அருள் = நினைப்பு மாத்திரையாலேயே அருள் புரியும். புழுகுநெய் = புனுகு. பிரதாபர் = புகழ்மிக்கவர். வாரியின் மறைய = கடலில் வெட்கி ஒளிய. பகலோன் வடிவும் பகல் மதியாக = ஞாயிற்றின ஒளி, பகலில் காணப்படும் நிலவு போல் ஒளி மழுங்க. அவாகமம் = பயனற்ற பிற சாத்திரங்கள். கேவலம் பஞ்சத்திலேசத்து = கேவல அவத்தைகள் ஐந்தினும் உள்ள (சாக்கிரம், சொப்பனம்,

சுழுத்தி, துரியம், துரியாதீதம்) அவிச்சை = அறியாமை. விவேகத்திற் போகாதாகி = விவேகமான வழியில் கழியாத தாய். திகழ் இதம் சேரா = பக்குவம் பெறாத. கதகம் = விதானம். கலம் = அணிகலம். மணி = அழகு. போல = போல இருந்து. செம்பிற்களிம்பு ஒன்றாய்க் கலந்திருத்தலுக்கும், கதகம் சேர்கலன் பயனின்மைக்கும் உடலிற் பொல்லாவிடம் உடனிருந்து அழித்து ஒழித்தற்கும் வந்தன. கருவி = கண் படல அறுவைக் கருவி. கிடைப்பதல்லால் = நீங்குமே தவிர. தூமம் = புகை. வாஞ்சை = அன்பு. உயர் சுதந்தரனை = உயர்ந்த சுதந்தரமான ஆன்மாவை. பரதந்திரியம் = அடிமை. சகசன் ஆகிய அணு = சகசமலம் மட்டுமே உடைய ஆன்மா. பாசியன் = பிற மலங்களும் (கன்மம் மாயை) உடையவன். பசுத்துவம் = ஆன்ம தத்துவம். பிணி = கட்டு. அணு என்றாக்கும் = சிறுமைப் படுத்தும். அஞ்சனம் = இருள். ஒழிவிலாது உயர்ந்து = இடைவிடாது வளர்ந்து. விழிதரும் போதில் = கடைக்கண் நோக்கும் பொழுது. இருவகைச் சத்தி = ஆவார சத்தி, அதோநியாமிகாசத்தி. மறைப்பதும், கீழ்நோக்கிச் செல்ல நியமிப்பதும் ஆகிய இருவகை.

"சிவாகமத்துள்ளே . . . ஆன்மாத்தோறும் ஆவது ஆகி என்பது முடிய இருவகைச் சத்தியின் வலிமை கூறுகிறார். ஒரு மல பதார்த்தம் = ஆணவ மலத்தை. கீழரணி = கீழ்க்கவசம். மேல் அரணி = மேற் கவசம். ஓம்பு அழல் = வேள்வித்தீ. விறகு அனல் போல் = விறகில் மறைந்திருந்து முறுக வாங்கிக் கடைய உண்டாகும் தீப்போல். முறுக = மிக நன்றாக – ஞானம் வெளிப்படும் அளவும். ஐவகைப் புகை எனும் மலோபாதி நீங்க என்று மாற்றிக் கூட்டுக. புகை என்னும் ஆறு விளங்கும் ஆணவம், கன்மம், மாயை திரோதாயி, மாயேயம் என்ற மலத்துன்பம் ஐந்தும் நீங்க. வெளிப்படல் உறாது = வெளிப்படாது.

உன் திருவருட் செய்கையால், மலோபாதி நீங்கி மெய்ஞ்ஞானம் வெளிப்பட்டது. "திகழ் இதம் . . . விடமும் போல" பல்பொருள் உவமையணி. ஓம்புஅழல் . . . உதிப்ப – உருவக உவமையணி

## 20. எழுசீர்கழிநெடில் ஆசிரிய விருத்தம்.

*பண்: திருக்குறுந்தொர்கை (நடபைரவி)* சுத்தாங்கம்

உறவொடு பகையை ஒழித்(து)அருள் உருவாய்
 ஓங்கிய குரவனும் அரசும்
மறலியும் எனவே மன்னுயிர்ப் பாவம்
 மாற்றுதற்(கு) அமைத்தமூ வரினும்
திறல்உறு தேவ சிகாமணி யாலே
 தீதெலாம் தீர்ந்திடில் இனிதாம்

மறமுடை அரசன் செயலினும் கொடிதாம்
அளப்பரும் நிரயவே தனையே.

*குறிப்புரை:*

ஓங்கிய = மிக உயர்ந்து விளங்கும். குரவன் = ஞான குரு. மறலி = இயமன். மாற்றுதற்கு = போக்க. திறல்உறு = ஆற்றல் மிக்க. தீது = பாவம். அரசன் செயல் – இங்குச் சிறையிடல் பிற ஒறுத்தல் முதலியன. அளப்பரும் நிரய வேதனை = அளவற்ற துன்பம் மிக்க நரக வேதனை.

பாவம் மாற்ற அமைந்தவர் குரு, அரசன், இயமன் என்ற மூவர். பாவம் மாற்றும் அரசன் செயலோ கொடிது. அதனினும் மிகக் கொடியது மறலி தரும் நிரய வேதனை. ஆனால் குருமூர்த்தி, பாவம் தீர்க்கும் முறையோ இனிது; தீர்ந்திடலும் பயனும் இனிது. இப்பாடல் வேற்றுமையணி.

## 21. நேரிசை வெண்பா

*பண்: சீகாமரம்* *(நாத நாமக்கிரியா)* *தாளம் : ரூபகம்*

வேதனை சேர் உள்ளம்தான் மெய்அறியு மோஅருணைச்
சேதனமாம் தேவ சிகாமணியைப் – போதம் நிறை
மாத்தவர்தம் பாசம்எலாம் மாய்ந்தசம னாந்தத்தே
சாத்தமனம் காட்சி தரும்.

*குறிப்புரை:*

வேதனை = அலைபாய்தல். மெய் = மெய்ப் பொருள். சேதனம் = ஞான உரு. போதம் நிறை = அறிவு நிறைந்த. மாய்ந்தசமன் = அழிந்த சமனாகும். அந்தத்தே = முடிவில். சாந்தமனம் = அமைதியான மனம், தண்ணென்றமனம். சேர் என்பதைத் தெய்வசிகாமணியைச் சேர் மாத்தவர் என்றும் கூட்டுக. சாந்தமனம் என்றது எதுகை நோக்கி வலித்தல் விகாரம் பெற்றது.

## 22. கட்டளைக் கலித்துறை

*பண்: தக்கேசி* *(காம்போதி)* *தாளம்: ஆதி*

தருமாயை என்னும் இரண்டும்இப் பாசத் தளையும் உறு
கருமாயை வாழ்க்கை அணுஅவை தானும் கருணைபுரி
திருமா நிதிஅரு ணாசலத் தேவ சிகாமணியும்
அருமா வியாபக நித்திய மாம்ஐந்(து) அனாதிகளே.

*குறிப்புரை:*

தரு = இறைவன். மாயை = மாயா சக்தி (நன்மாயை). தளை = கட்டு. உறுகருமாயை வாழ்க்கை. அணு அவை = அளவற்ற கருப்புகுந்து மாயையாம் வாழ்க்கை நடத்தும் ஆன்மாக்களும். திருமாநிதி = திருவருட் செல்வம். அருமா = அருமை + மா = அரியனவாய் பெரியனவாய். வியாபகம் = எங்கும் அறியப்படு வனவாய். நித்தியம் = என்றும் உள்ளவை. ஐந்து = தரு, மாயாசக்தி, பாசத்தளை, அணு (ஆன்மா), தேவசிகாமணி. அனாதிகள் = படைக்கப்பட்டனவல்ல.

## 23. நேரிசை ஆசிரியப்பா

*இராகமாலிகை* *சுத்தாங்கம்*

அனாதி பரானந் தப்பெருஞ் சோதியை
ஆதியோ(டு) அந்தம் சோதனை குறித்தலின்
மாய வராகம் காயம் சேந்து
குமரன் வேலாற் சமர்செயும் முன்னும்
புண்படச் சிவந்த பண்பு காட்ட

அந்தம் உறாதே நொந்தவெள் ளன்னமும்
மாவேள் கொடிச்செஞ் சேவல் ஆக
செஞ்சுடர் விரிக்கும் திருஅரு ணாசலத்
தேவ சிகாமணிச் சீமான் அருளில்
பாரம் தாங்கிய சீர்அனந் தேசர்

சுவதாய்ப் போகம் துய்ப்பித் திடுதலின்
மோகினி எனும்பேர் ஆகிய மாயையில்
பாய பாளையிற் பூவிரி தோன்றப்
பூவிரி பழுக்கா யா விரி வதுபோல்
மிச்சிரம் அசுத்தம் எனவிரி தத்துவம்

சாதா ரணமும்அ சாதா ரணமும்
சாதா ரணாசா தாரண வடிவும்
படைத்(து) இனி(து) அளிக்கும் பான்மை திதியில்

அசாதா ரணத்தின்உள் ஆம்திரி பந்தி
பௌவன போகம் செவ்விதின் நுகர

வரிபிர நட்ட வாகிய தேகியும்
அருவப் பிராப்த வாகிய தேகியும்
தூலதே கம்கொடு துய்க்கச் சமைந்திட
நல்துவி பந்தி விஞ்ஞான கலராய்
அற்று மலத்தோடு அதீதத்(து) இருப்பச்

சுவாபகா லத்துமுன் சொல்லிய மூவகை
அனைவரும் பிரள யாகல ராகத்
தோற்றம் ஒடுக்கம் தோறும் சுழன்று
மாயா பந்தத்(து) ஆய்ஆன் மாக்கள்
உறுதுயர் யாவையும் ஒழியும் காலம்

பாச ஆலிலை பழுத்தபக் குவமாய்ச்
சொல்லும் சொரூபசத் துவபரி ணதியும்
மாயையால் விதையில் வளர்ந்தன எழுந்து
தோன்றிய சொரூபாந் தரபரி ணதியும்
கன்ம நாசம் என்(று) இம்மூ வகையின்

பரிபா கம்அனுக் கிரகம் ஆகவும்
பாகம் உறாஇப் பான்மூ வகைக்கும்
அனுக்கிர கம்திரோ தான மாகவும்
அரண்அறிந்(து) இயற்றுவ(து) அல்லால்
அரி(து)அரி(து) அறிவ(து) ஆன்மா திகளே.

*குறிப்புரை:*

"குமரன் வேலாற் சமர் செயும் முன்னர் (என்று தொடுக்க) = முருகன் வேல் தாங்கிச் சூரபன்மனுடன் போரிடுமுன். பரானந்தப் பெருஞ்சோதி = மேலான பேரின்ப வடிவமான பெருஞ்சோதி, பரசிவம். ஆதியோடு அந்தம் = திருவடி திருமுடி. சோதனை குறித்தலின் = ஆராயப் புகுந்ததால். மாயவராகம் காயம் சேந்து = மாய + வராகம் + காயம் + சேந்து = அஞ்ஞானமுடைய பன்றி (திருமால்) உடல் சிவந்து. மாயவர் + ஆகம் + காயம் + சேந்து = திருமால் உடம்பு காயத்தால் சிவந்து. புண்பட = பெரும்புண் உண்டாகி. சிவந்த பண்பு

காட்ட = மனம் நொந்ததை உணர்த்தவும். அந்தம் உறாதே = திருமுடி காணாமல். வெள்ளன்னம் = வெண்மை + அன்னம் = அறிவற்ற அன்னப் பறவை; வெண்மையான அன்னப்பறவை – பிரமன். மாவேள் கொடி = மன்மதனின் கொடிச் சின்னமாகிய மீனுக்கு செஞ்சேவல் ஆக = சிறந்த காவலாக அமையவும். (பாலுக்குப் பூனை காவலானான்போல, மீனுண்டு வாழும் அன்னம் மீனுக்குக் காவல்!) அருளில் = அருளினால். பாரம்தாங்கிய = அண்டம் காத்த. சீர்அனந்தேசர் = சிறந்த அனந்ததேவர். சுவதாய் = சுதந்தரமாக. போகம் துய்ப்பித்திடுதலின் = உயிர்களை இன்பம் நுகரச் செய்ததால். பேராகிய = பெரிதாகிய. மோகினி என்னும் மாயை = மோகினி எனப்பெறும் அசுத்தமாயை. பாய = பரவ. பூவிரி பழுக்காய் = விரிபூ பழுக்காய் = மலர்ந்த பூக்கள் பாக்குக்குலையாக. மிச்சிரம் = கலப்புத் தத்துவம் (வித்யாதத்துவம்). அசுத்தம் அசுத்த தத்துவம். சாதாரணம் = ஆணவ மலம் மட்டுமேயுடைய விஞ்ஞான கலர். அசாதாரணம் = மும்மலமுடைய சகலர். சாதாரணா சாதாரணர் = ஆணவம் கன்மம் உடைய பிரளயாகலர். அளிக்கும் திதி = காக்கும் நிலை. திரிபந்தி = சகலர். பௌவன போகம் = இவ்வுலக இன்பம். நுகர = நுகரவும். வரிபிர நட்டவாகிய தேகியும் = ஆணவக் கட்டறுக்கப் பிறந்த விஞ்ஞானகலரும். அருவப் பிராப்த ஆகிய தேகியும் = அருவமான முன்வினை புசிக்கப் பிறந்த பிரளயாகலரும். தூல தேகம்கொடு = இவ்வுலகில் பிறந்து. துவிபந்தி = பிரளயாகலரினர். விஞ்ஞான கலராய் = ஆணவம் மட்டுமே உடையராய். அற்று = கன்மம் அற்று. மலத்தொடு = ஆணவ மலத்துடன். அதீதத்து இருப்ப = மேல் நிலையில் இருக்க. சுவாபகாலம் = சுத்தகாலம். "மூவகை அனைவரும் தோற்றம் ஒடுக்கம் தோறும் பிரளயாகலராகச் சுழன்று மாயாபந்தத்தாய்" என்று கூட்டுக. மாயா பந்தத்தாய் = அழியாத மலமுடையனவாய். உறுதுயர் யாவும் ஒழியும் காலம் = மலத்துயரனைத்தும் ஒழியும் காலத்தில், பரிபக்குவ நிலையில். சொரூபசத்துவ பரிணதி = சொரூபத்தில் சத்துவக் கனிவு உடையராய் இருப்போர். விதையில் = தன் மாத்திரையில். சொரூபாந்தர பரிணதி = சொரூபத்தில் குறைகொண்ட கனிவு உடையராய் இருப்போர். கன்ம நாசம் = கன்மம் அழிய வேண்டிய பக்குவ நிலையில் இருப்போர். (இம்முத்திறத்தாரும் பக்குவம் பெறு நிலையினர்) பரிபாகம் = பக்குவப்படுத்துதல். அனுக்கிரகம் = அருள்பாலித்தல். பாகமுறா = பக்குவ நிலையுற வேண்டியோர். திரோதானம் = மறைத்தல். அரண்அறிந்து =

ஆன்மாக்களின் பாதுகாப்பை அறிந்து. இயற்றுவர் = அருள்புரிவர். ஆன்மாதிகள் அறிவது அரிது அரிது = குருமூர்த்தி அருள் பாலிக்கும் நிலையை. ஆன்மாக்கள் அறிவது இயலாது.

பக்குவப்பட்ட நிலையினர்க்கும், பக்குவப் படவேண்டிய நிலை யினர்க்கும் அவரவர் தகுதியறிந்து குருமூர்த்தி அருளுவர். இதனைப் பிறர் அறிதல் இயலாது என்க.

"மாயவராகம் காயம் சேந்து" — இரட்டுற மொழிதல். "வெள்ளன்மை" — இரட்டுற மொழிதல். "வெள்ளன்னம் மாவேள் கொடிச்செஞ் சேவல் ஆக" — நயமுறு தொடர்.

## 24. பதினான்குசீர் கழி நெடில் ஆசிரிய விருத்தம்

*பண்: கௌசிகம் (கரகரப்பிரியா) தாளம் : திருபுடை*

திகழும்மனம் இந்திரியம் ஒன்றைச் செலுத்திடத்
தேரின்இரு விகற்(பு)அ வித்தே
சேர்ந்தறிஅ ராகம் விகற்பமாய் இச்சையைச்
செய்யமனம் மையம் செய்தே
நிகழ்அகங் காரமதி ஏவஒன்(று) அறிவல்என
நிற்ப ஒன்(று) உறுப தார்த்த
நிச்சயம் செய்யமுக் குணம்ஈன்ற புத்தியில்
நிறைந்தசுகம் துக்கம் மோகம்
புகல்நியதி நியமிக்க ஓர்காலம் மேவப்
புகழ்கலை புசிப்ப தாக்கப்
புந்தியிற் போகம் புசிக்கஉள் முகனாய்ப்
புகுந்த புரு டன்த னக்(கு) ஓர்
மகன்எனும் சீவன்இவ் வாறுமோ கினியால்
மயங்கிப்பு சிக்க ஊட்டி
வருதுயில் உறச்செயும் அருணைவாழ் தெய்வ
சிகாமணி மறா(து)அ டுத்தே.

*குறிப்புரை:*

திகழும் மனம் = ஒளியுடன் விளங்கும் மனம். இருவிகற்பு அவித்து = விருப்பு வெறுப்பின்றி. தேரின் = ஆராய். இந்திரியம்

ஒன்றை = மெய், வாய், கண், மூக்கு, செவி ஆகிய இந்திரியங்களில் ஒன்றை. செலுத்திட = உய்க்க. சேர்ந்து = பொருளுடன் சேர்ந்து. அராகம் = ஆசை, அவா. விகற்பம் ஆய் = மனத்தின் வேறுபட்டு. இச்சையைச் செய = நுகரும் ஆசையை உண்டாக்க. மையம் செய்து = (அவாவை, மனம்) அமைதிப்படுத்தி. அகங்கார மதி ஏவ = ஆணவமுடைய அறிவை ஏவி. ஒன்று அறிவல் என நிற்ப = உண்மையான ஒரு நிலையை, உண்மை நிலையை அறிவேன் என்று கருத. உறுபதார்த்த நிச்சயம் செய = தான் பற்றிய பொருளைப்பற்றி உறுதிப்படுத்திக் கொள்ள. முக்குணம் ஈன்ற புத்தியில் = முக்குணம் தரு (சாத்துவிகம், இராசதம், தாமதம்) புத்தியில், சுகம், துக்கம் மோகம் நியதி = இன்பம் துக்கம் ஆசை முறைமை இவை ஒன்று கூடி. நியமிக்க = உறுபதார்த்த நிச்சயம் செய. காலம் = ஆன்ம போகங்களை அளக்கும் காலதத்துவம். மேவ = பொருந்த. கலை = உடம்பு.

புசிப்பதாக்க = நுகர்வதாக ஆக்க. போகம் புசிக்க = இன்பம் நுகர. உள்முகனாய்ப் புகுந்த புருடன் = மனத்தின் வழியே புகுந்து இடம் கொண்ட இறைவன். மகன் எனும் சீவன் = மகன் முறையுடைய ஆன்மா. மோகினியால் = மாயையால். புசிக்க ஊட்டி = அனுபவிக்கச் செய்து. வருதுயிலுறச் செய்யும் = அனுபவித்தால் வரும், இளைப்பு ஆறச் செய்யும். மறாது அடுத்து = மறுக்காமல் பொருந்தியிருந்து திகழும் மனம், இருவிகற்பு அவித்துத்தேரின், இந்திரியம் ஒன்றைச் செலுத்திட என்று மாற்றி இயைக்க. உள்முகமாய்ப் புகுந்த அருணை வாழ் தெய்வசிகாமணி புருடன், தனக்கு ஓர் மகன் புசிக்க, மறாது அடுத்து ஊட்டி வருதுயிலுறச் செய்யும் என்று முடிக்க. இதனால் உடன்போய்த் திருத்தும் நிலை கூறப்பெறுகிறது.

## 25. நேரிசை வெண்பா

*பண்: காந்தார பஞ்சமம்* (அரிகாம்போதி) *தாளம்: ரூபகம்*

அடுத்(து) அருணைத் தேவ சிகாமணியால் அன்றோ
வடுத்தனை நீத்(து) அங்கனகம் ஆனேன் – தொடுத்த
அலகுடைய தங்கம்இனி ஆகேன்அப் பாலும்
இலகுடைய தங்கம்ஆ வேன்

### குறிப்புரை:

அடுத்து = சார்ந்து. வடுத்தனைநீத்து = மும்மலக்குற்றம்விட்டு. அங்கனதம் ஆனேன் = அங்கு + அனகம் + ஆனேன் = அப்போதே

பாவமற்ற தன்மையன் ஆனேன். தொடுத்த = தோண்டிஎடுத்த. அலகு உடைய = அளவில் உள்ள. தங்கம் = மாசுடைய தங்கம். ஆகேன் = ஆகமாட்டேன். அப்பாலும் = இனி என்றும். இலகுடைய தங்கம் = ஒளி வீசும் பொன். தேவசிகாமணியால் (அவரை) அடுத்தன்றோ என்று கூட்டித் தொடர்க. இப்பாடல் உருவகவணி.

## 26. கட்டளைக் கலித்துறை

*பண்: வியாழக்குறிஞ்சி (நாட்டைக்குறிஞ்சி) சுத்தாங்கம்*

வேனிலும் தண்ணெனத் தென்றல் உலாம்பொழில் மேகம் என்னத்
தேனின் மழைபெய் அருணைநம் தேவ சிகாமணிகண்
மீன்இன மேனி யனகனம் சிந்தனை வேறலவே
ஈன்இனம் தேடும் துளியினம் ஆகும் யாவர்க்குமே.

### குறிப்புரை:

வேனிலும்தண்என = முதுகோடையும் குளிரும்படி (வீசும்). பொழில் = சோலையில். மேகம் என்ன = மழைபோல. கண்மீன் இன மேனியன = கண்கள் மீன் கூட்டத்து உடம்புபோல் ஒளி வீசுவன. கனம் சிந்தனை = சீர்மை வாய்ந்த சிந்தனை. ஈன் = இவ்வுலகு. இனம் தேடும் துளியினம் ஆகும் = தனக்கு ஒப்புமை தேடும் மழைத்துளிக்கு இனமாகும். (மழை போன்று கருணை பெருகுவன) கனம் சிந்தனை, இவ்வுலகை ஈடேற்றுவது தவிரப் பிறிதில்லை.

மீனினமும் துளியினமும் கண்ணின் ஒளிக்கும் கருணைக்கும் வந்தன, பார்வை ஒளியால் ஈர்த்துக் கருணை புரிகிறவர் என்க. இப்பாடல் உவமையணி.

## 27. நேரிசை ஆசிரியப்பா

*இராகமாலிகை சுத்தாங்கம்*

யாவரும் காண வேபசந் தோகை
காவின்மேல் இருந்து கண்ணொளி பரப்பத்
தாதையே துதைந்து பேதைவண்(டு) ஊதும்

கூதள மலர்வெண் கோ(டு)என இசைப்ப
முத்தள அருவி மத்தளம் முழங்க

கின்னர மிதுனங்கள் இன்னிசை பாட
வாயு வாய்துளை வேய்தான் இசைப்ப
குருஅரு ணாசலக் கொழுஞ்சுடர் ஆகும்
திருஅரு ணாசலத் தேவ சிகாமணி
நிருமல வாழ்க்கை நீதோய்ந்(து) அறியாக்

கருமல வாழ்க்கைஎம் காதை கேட்டி
உலகம் ஏழும் அலேகம(து) ஆக
விழுத்தகு மேரு எழுத்தாணி ஆக
பலநாள் எழுதினும் தொலையாப் பாரதம்
ஆயினும் சிலசில தீயினும் கொடியன

மாயா தேகத்(து) ஆயமுக் குணம்செய்
புத்தி என்றது பத்திஒன்(று) அறியா(து)
எட்டுக் கோணல் பட்டசக் கரத்து
ஆறுநூற்(று) ஈறா(று) ஆய பாவச்
சூறா வளியில் சுழலும் தோறும்

தேடிய கன்மம் கோடி கோடி
சேரண உலகில் காரணம் இன்மையில்
ஆதி யோவன்(று) அநாதி பந்தம்
உலந்தபின் மாயையில் உறைந்தபக் குவமாய்ப்
புலர்ந்தபின் அணுக்கள் புந்தியில் முளைத்து

மனவாக் காயத்(து) அனுதினம் வளர்ந்தே
அக்கினிட் டோமம் அந்தணர் தாம்தம்
செய்தலின் கன்மம்என்(று) எய்துபெயர்த்(து) ஆகி
சஞ்சிதம் முதலா விஞ்சு மூன்றில்
ஆர்த்த மாய்வந்(து) அடைந்த கன்மம்

சாதி ஆயுப் போகம் என்றும்
சனகம் தாரகம் போக்கியம் என்றும்
அதிட்டம் திட்டம் அநியதம் என்றும்
செம்பொன் இரும்பில் செய்விலங்(கு) இரண்டெனத்
தன்மா தன்மம் என்னும்ஈர் உருவாய்த்

துக்கம் மோகம் சுகம்எனப் பலவாய்ப்
புக்குழிப் புக்குப் பொருந்தும் ஆதலின்
இறந்(து) இறந்(து) உலகில் பிறந்திடுந் தோறும்
பாபபீ டைபெரும் பாதகம் செய்தலின்
நரகம் நூற்று நாற்பதில் பயின்றபின்

விலங்(கு)உரு வாய்இத் தலம்தனில் பிறந்தும்
தரும நியாயம் தப்பிய தீமைக்
கருமம் தன்னால் உறுமீன் ஆயும்
வாக்கு நான்கால் வருபவம் தொடரப்
பறவை ஆகும் பிறவி யாயும்

நாத்திகம் பேசலின் நயன்இ பாலையில்
பூத்துப் பயன்படாப் புன்மரம் ஆயும்
பவம்உறப் பிறர்க்கும் பயம்செய் திடலால்
சருவம்உண்(டு) உழலும் சாதி யாயும்
வெய்துறு பயம்செய்து மெய்அனா சாரம்

செய்துநாய் முதலாம் தீப்பிறப்(பு) எய்தியும்
தழைத்திடும் கிரக தானாப காரம்
இழைத்தலின் பரதந் திரியம் எய்தியும்
கருணைஒன்(று) இல்லாக் கருத்(து)ஒன்(று) உடைமையின்
இருள்நனி பயக்கும் இழிபிறப்(பு) ஏய்ந்தும்

நிறைகுணம் இன்மையின் நேசத் தால்திரு
முறைகரந் திடுதலின் மூங்கை யாயும்
துன்நெறி யால்உயிர்த் தொகைக்கு இடர்செய்தலின்

நன்னெறிக் கண்செவி நாசி குறைந்தும்
அலைவுறு கொலையால் அற்பாயு வாயும்

உலவாக் காலம் உழந்தனன் எந்தாய்
வரம்உறு நல்உப வாசயம் அத்தால்
பரத கண்டத்(து)இப் பான்மையிற் பிறந்தேன்
பவம்உறு பவ்வப் படுதிரைத் துயர்உழந்(து)
அவம்உறும் அழுவத்(து) அழுந்தி னேனைப்

புடாப தார்த்தம் என்(று) ஓர்புணை ஏற்றி
ஞானபா தத்தின் நற்கரை ஏற்றிணை
பிறவா வாழ்க்கையும் பெற்றேன்
அறவா பே(று)இனி யாவரு வனவே.

## *குறிப்புரை:*

பசுந்தோகை = பசிய தோகையுடைய ஆண்மயில். கா = சோலை. மேல் = மரத்தின் மேல். கண் ஒளி பரப்ப = இடமெங்கும் ஒளி பரப்ப. தாதையே = தாது +ஐ+ஏ = பூவிதழையே. துதைந்து = நெருங்கி. பேதை வண்டு = அறிவற்ற வண்டு. மகரந்தத்தை ஊதவேண்டிய இவ்வண்டு, பேதையாதலின் பூவிதழை ஊதிற்று என்க; கூதளமலர் = வெள்ளரி மலர். வெண்கோடு = வெண் சங்கு. முத்தள அருவி = மூன்று இடங்களில் பிரிந்து விழும் அருவி. கின்னா மிதுனம் = இணைபிரியாக் கின்னரப் பறவை. வாயுவாய் துளை = வாயுதுளைவாய் = காற்று துளையில் (புகுந்து). வேய் = புல்லாங்குழல். நிருமல வாழ்க்கை = தூய வாழ்க்கை. தோய்ந்து அறியா = வாழ்ந்து அறியாத. கருமல வாழ்க்கை = கரியமல வயப்பட்ட வாழ்க்கை. காதை = கதை, வரலாறு. கேட்டி = கேள். அலேகம் = ஏடு. தொலையா = எழுதி முடிக்கவியலாத. பாரதமாயினும் = பாரதக் கதைபோல் நீண்டதாயினும். மாயா தேகத்து = மாயை வயப்பட்ட உடம்பிலுள்ள. முக்குணம் செய்புந்தி = காமம், வெகுளி, மயக்கம் தரும் புத்தி. எட்டுக் கோணல் பட்ட சக்கரத்து = எண் திசையுடைய உலகில். சேரண உலகில் = பதனழிந்த உலகில். காரணம் இன்மையின் = என் ஆன்மாவுக்கு மூல காரணம் இல்லாமையால். ஆதியோ அன்று = நான் இறையல்லேன். அனாதிபந்தம் = ஆணவமலம். உலந்த பின் = வற்றிய பிறகு. மாயையில் உறைந்த பக்குவமாய் = மாயையில் தங்கியிருக்கும் பக்குவ நிலையில். புலந்த பிறகு = அது காய்ந்தபின்.

புந்தியில் முளைத்து = புந்தி தத்துவத்தில் மூல முளைவிட்டு நிச்சயிக்கப் பெற்று. மனம்வாக்காயத்து = மனம் வாக்கு. காயம் இவற்றின் தொழிற்பாடுகளால். அக்கினிட்டோமமந்தணர் தாம்தம் செய்தலின் = வேள்வியை அந்தணர் தம்தம் நோக்கத்திற்கு ஏற்பப் பலவகையாய்ச் செய்தல் போல. (அந்தணர் அக்கினிட்டோமம் தாம்தம் செய்தலின், மனம் வாக்காயத்து அனுதினம் வளர்ந்து என்று கூட்டுக) ஆர்த்தமாய் = அனுபவிக்கும் துன்பமாய். சாதி = இனம், மனிதர், விலங்கு, புல் முதலிய இனங்கள். (உயர்திணை, அஃறிணை இனங்கள்) ஆயுள் = அதன் அதன் வாழ்நாள். போகம் = அதனதன் இன்பம். சனகம் = பிறப்புக்குக் காரணமான சூக்கும வினை. போக்கியம் = இன்பத்துக்குக் காரணமான சூக்குமவினை. அதிட்டம் = நல்வினையினும் கூடுதலான பலன். திட்டம் = குறியெதிர்ப்பான பயன். அணியதம் = இன்ன காலத்தில் புசிக்கப் பெறும் என்று அறியலாகாத கன்மம். விலங்கு இரண்டு = தன்முனைப்புடன் செய்த நல் வினையால் வந்த பொன் விலங்கு; செய்த பாவத்தால் வந்த இரும்பு விலங்கு. (இரண்டுமே அனுபவித்துத் தீர்த்தற்குரியனவாகலின் இருவகை விலங்குகள் ஆயின) தன்மாதன்மம் = தன்மம் + அதன்மம் = அறம் பாவம். புக்குழிப்புக்கு = புக வாய்ப்புள்ள இடங்களில் எல்லாம் புகுந்து. பாப்பீடை பாவமாகிய துன்பம். பயின்றபின் = கிடந்து உழன்ற பிறகு. தப்பிய = கொன்ற. வாக்கு நான்கு = பொய், குறளை, கடுஞ்சொல், இன்னாச்சொல். புன்மரம் = அற்ப மரம். பயம் = உதவி, நன்மை. (தன் முனைப்புடன் செய்தது)

சருவம் உண்டு உழலும் சாதி = எதனையும் உண்டு துன்பப்படும் அஃறிணை இனம். வெய்துறுபவம் = துன்பம் தரும் பாவச்செயல். ப்ரதந்திரியம் = அடிமை வாழ்வு. இருள் = துன்பம். இழி பிறப்பு = இழிந்த அஃறிணைப் பிறப்பு. நேசம் = பேராசை. திருமுறை கரந்து இடுதலின் = செல்வத்தை முறை தவறி ஈட்டி மறைவாகச் சேமித்து வைத்தல். மூங்கை = ஊமை. துன்னெறி = தீய நடத்தை. தொகை = கூட்டம். நன்னெறி = நன்னெறியில் செல்ல வேண்டிய. அலைவு = துன்பம். அற்பாயு = குறை ஆயுள். உலவாக்காலம் = நீண்ட நெடுங்காலம். உழந்தனன் = துன்புற்றேன். எந்தாய் = எம் ஞானத் தந்தையே. வரம் = மேன்மை. நல் உபவாசயம் அத்தால் = நல்ல விரதங்களின் காரணமாக. இப்பான்மையில் = இவ்வாறு மனிதனாக. பவமுறு பவ்வப்படுதிரைத் துயர், உறுபவ்வப்படுதிரைத்துயர் = மிகுந்த பிறவியாகிய கடலில் உண்டாகும் அலை போன்ற துன்பத்தால். அவம் உறும் = பழி தரும். அழுவத்து = அழுக்கில், சேற்றில். அழுந்தினேனை = புதைந்து கிடந்த என்னை. புடா பதார்த்தம் என்று = சிறு குறையுடைய மாணிக்கம் என்று மதித்து. ஓர் புணை ஏற்றி = ஒப்பற்ற

உன் திருவடித் தெப்பத்தில் ஏற்றி ஞான பாதத்தின் நற்கரை = ஞானத் திருவடியாகிய நல்ல கரையில் (இன் – சாரியை) பிறவா வாழ்க்கை = வீட்டுலக வாழ்க்கை, முத்தி. பெற்றேன் = உறுதி பற்றிய காலவழுவமைதி. அறவா = அறமாய் விளங்குகின்றவனே. பேறு இனியாவருவன உள = இனிவருவன வேறுயாவுள = இனி வரும் பேறுகள் யாவை உள்ளன. (எதுவும் இல்லை. இதுவே அடையத்தக்க பேறு என்பது குறிப்பு)

அடிகள் 1 – 7 இயற்கை வருணனை. செம்பொன். . . ஈருருவாய் – நிரல் நிறையணி. பவம் உறு பவ்வப். . . .ஏற்றினை – ஏகதேச உருவகஅணி எட்டுக்கோணல்பட்ட சக்கரத்து. நேசத்தால் திருமுறை கரந்திடுதலின் = நயம்மிகு தொடர்கள்

## 28. அறுசீர் கழி நெடில் ஆசிரிய விருத்தம்

*தன்யாசி* *சுத்தாங்கம்*

**யாவரும் பரவும் மேன்மை எய்தும்இவ் அருணை தானே**
**தேவரும் புகழ்செய் தேவ சிகாமணி சேரும் மூதூர்**
**தாவரும் அகம்கார் ஆண்டத் தலேச்சுரம் தனிப்பேர் மன்னும்**
**நீவரும் நினைக்க முத்தி நிகழ்மனோ புவனம் ஆமே.**

### குறிப்புரை:

சேரும் = எழுந்தருளி இருக்கும். மூதூர் = பழைமையான ஊர். தாவரும் = கேடற்ற. அகம் = மலையை. கார் ஆண்டு = மழை ஆண்டு வருவதால், வளமழை பொழிவதால். அத்தலேச்சுரம் = அ+தலை+ஈச்சுரம் = அந்தத் தலை சிறந்த தலம். தனிப்பேர் மன்னும் = ஒப்பற்ற புகழில் நிலைபெறும். புவனம் = உலகில் நீவரும் = இழி குணத்தவரும் கூட. முத்திநிகழ்மன் = முத்தி பெறுவது உறுதி.

புவனம் தாவரும் அகம் . . . என்று கூட்டுக. "நீவரும் நினைக்க முத்திதரும் தலம் அருணை" என்றவாறு.

## 29. நேரிசை வெண்பா

*பண்: புறநீர்மை* *(பிலகரி)* *சுத்தாங்கம்*

**மேவரிய வெண்மதியின் மேலேநன் நூலின் உறத்**
**தேவ சிகாமணியைச் சேர்த்தணிந்தால் – ஓவாத**

நல்அலங் காரமாம் நள்இரவெ லாம்பகலாம்
அல்லல்அங் காரவரி தாம்.

**குறிப்புரை:**

வெண்மதி = தூய அறிவு. நன்னூலின் உற நல்ல சாத்திரத்துடன் பொருந்த. தேவசிகாமணியை = தேவசிகாமணி அருள் ஞானத்தை. சேர்த்து அணிந்தால் = கட்டி அணிந்தால் ஓவாத = இடைவிடாத. நல் அலங்காரமாம் = சிறந்த அழகுண்டாகும். நள் இரவெலாம் = செறிந்த வறுமை முழுதும். பகலாம் = பகல்+ஆம் = பிளக்க, ஒழிக்க முடியும். அல்லல் அங்காரம் = துன்பத்தீ. அரிதாம் = கெடும்.

நெற்றியில் நூல்கொண்டு கட்டியமணி அலங்காரமாவதுடன் ஒளிதரும். நன்னூலின் உற மதியிற்கட்டிய தேவசிகாமணியாகியமணி, அலங்காரமாவதுடன், இரவைப்பகலாக்கும், அல்லல் அங்காரம் தீர்க்கும்.

## 30. கட்டளைக் கலித்துறை

*பண்: திருக்குறுந்தொகை (கானடா)* சுத்தாங்கம்

அரியார் உறையும் அருணையும் என் இதயாம்புயமும்
பிரியா(து) உறைதரு தேவ சிகாமணி பேதைமை போல்
தெரியா(து) அயர்த்த அடியார் தினம்தினம் செய்தபிழை
பரியா(து) அறுத்துச் சுடுவதெல் லாம்அவர் பாசத்தையே

**குறிப்புரை:**

அரியார் = தீ, தீ வடிவான சிவபெருமான். இதயாம்புயம் = இதய தாமரை. பேதைமைபோல் = அறியாமை போல. தெரியாது அயர்த்த அடியார், தகவுற வாழத்தெரியாது மறந்த அடியவர். .பரியாது = பிழைக்குப் பரிவு காட்டாது. அறுத்து = பிழையைக் களைந்து. பாசத்தைச் சுடுவது = பாசத்தைச் சுட்டுத் தீய்ப்பது. எல்லாம் = இச்செயல்கள் எல்லாம் "கருணையே" என்பது வருவிக்க.

குருமூர்த்தி, அடியார் பிழைக்குப் பரியாது அறுத்துப் பாசத்தைச் சுடுவது மறக்கருணை என்க.

## 31. நேரிசை ஆசிரியப்பா

**இராகமாலிகை** **சுத்தாங்கம்**

பாசத் தளையாற் பல பகுப்(பு) ஆதலின்
காரா இனத்தினுள் ஓர்ஆ வேறாய்
விசாதியில் பிரிந்து சாதியின் நீங்கிச்
சுகத பேதச் சொரூபம்நீங் காமையின்
அன்னது போலும் மன்னுயிர் ஒன்றே

யூகம் அனுபவத்(து) ஓர்இரண்(டு) ஆகி
மூவகைச் சத்தியாய் நால்வகைக் குலமாய்ப்
பஞ்சவன் வனங்கொளும் படிகம் போல
ஆ(று)அத்து வாவின் வேறுவேறு உருவாய்
எழுவகைத் தோற்றத்து எண்வகை மலத்தொடு

நவம்உறு கன்மத்து அவம்உறல் ஒழித்துத்
தசகா ரியத்தின் வசமுற இருத்தி
வரமும் போகமும் மருட்கையும் உடைய
மேல்கீழ் நடுஎன விளங்(கு)அவத் தையினில்
இருதை ஆதிசாக் கிராதிஐந் தின்கண்

தொகுபிர மாதியில் தோய்சுத்த வித்தையில்
திகழ்ஐந்(து) எழுத்தொடு சிவமந்திரம் சொல
இவ்வகை யின்றிச் செய்வகை மயங்கி
புருவ நடுமுதல் புகல்கீழ் அவத்தையில்
இருவகை இந்தியம் விடயம் இருபதும்

உட்கர ணங்கள்ஐந் தொடுகால் பத்தும்
என்(று)ஐ ஏழ்உறல் சாக்கிரம் என்(று)ஆக
வாயு வசனாதி நால்வாயில் இருபது
மனாதி புருடன் வாகைஐந் துடனே
ஐயைந்(து) உறல்சொப் பனம்என்(று) ஆக

செந்நெறிப் பிராணனனும் சித்தமும் புருடனும்
சொன்ன மூன்(று)உறல் சுழுத்தி ஆக
புருடன் பிராணன்ஓர் துரியம் ஆக

புருடனி லிங்கம் புகச்சி விப்பது
தெருளறு துரியா தீதம் ஆக

ஐவகை ஆகும் அவத்தை நீங்கிப்
பிரத்தியா காராதி பெறுசாக் ராதியில்
உண்ம னாந்தம் மட்(டு) உயர்தா னத்துச்
சாக்கிர சாக்கிரம் தான்முத லாகச்
சாக்கிர துரியம் தன்னின் மீதே

காலம் பரம்அதீ தம்பர தரிசனம்
விசுவக் கிராசம் உபசாந் தம்சிவ
தெரிசனம் சாயுச் சியம்பன் னொன்றும்
ஐம்மூன் றாம்துரி யாதீ தத்துள்
சிவபோ கப்பெரும் சிவசா திருச்சியச்

சிவசா யுச்சயச் சிவானந் தம்தனைச்
சிறியேற்(கு) உதவும் பெருமை யாள
தகாத களங்கமும் தமரும் இல்லா
மகாமணி தேவ சிகாமணிச் சோதி
மருள்நா சம்செயும் அருணாச லேச

இவ்வகை யின்றிச் செய்வகை இல்லாப்
பாலர்வா லீசர் மாதர்போ கியர்என்(று)
என்போ லியர்க்கும் இருங்கதி வேண்டிச்
சிலநிர்ப் பீச் தீக்கையும் செய்தி
பெரியோர் பெறும் பே(று) எளியோரும் எய்தலின்

நின்பெருங் கருணை நீர்மைகண்(டு)
அன்பி லேன்நின் அடிபணிந் தேனே.

*குறிப்புரை:*

பாசத்தளை = மலக்கட்டு. பல பகுப்பு = பலவகை. கார் ஆ = காராம் பசு. விசாதி = வேறுசாதி, இனம். சாதியின் நீங்கி = முன்னைய இனத்தின் நீங்கியும் கூட. சுகதபேதச் சொரூபம் = சொந்தமான வேறுபட்ட வடிவம். நீங்காமையின் = நீங்காதிருத்தல். (இன்– சாரியை) அன்னது போலும் = அத்தன்மை போல.

"மன்னுயிர் ஒன்றே; பாசத்தளையால் பல பகுப்பாதலின்" என கூட்டித் தொடர்க. யூகம் = விவேகம். இரண்டாகி = இருவகைப்பட்டு.

மூவகைச் சத்தியாய் = இச்சை ஞானம் கிரியா சத்திகளின் வயப்பட்டதாய்; மூவகைச் சத்தியுடையனவாய். நால்வகைக் குலமாய் = கருப்பை, வித்து, முட்டை, தாமே இரண்டாய்ப் பிளப்பன என்ற நால்வகை இனமாய். பஞ்சவன் வனங்கொளும் படிகம் போல = அழுத்தமான ஐவகை வண்ணங்களையும் ஏற்று நிறம் பொலியும் படிகமணி போல. ஆறு அத்துவா = மந்திராத்துவா, வர்ணாத்துவா, பதாத்துவா, தத்துவாத்துவா, புவனாத்துவா, கலாத்துவா ஆகிய ஆறு அத்துவாக்கள். எழுவகைத்தோற்றம் = தாவரம், ஊர்வன, நீர்வாழ்வன, நாற்காலி, பறவை, மனிதர், தேவர் ஆகிய வடிவங்கள். எண்வகை மலம் = ஆராயப்படும், எண்ணப்படும் வகையுடைய மலங்களுடன். நவம் உறு = புதிது புதிதாக வந்து சேரும். அவம் உறல் = பயனின்று. வாழ்தல் = பழியுறல். தச காரியத்தின் வசமுற = தத்துவரூபம், தத்துவ தரிசனம், தத்துவசுத்தி, ஆன்மரூபம், ஆன்மதரிசனம், ஆன்மசுத்தி, சிவரூபம், சிவதரிசனம், சிவயோகம் சிவபோகம் என்பனவற்றின் வசமாகி வரமும் போகமும் மருட்கையும் உடையன முறையே மேலாலவத்தை, நடுவாலவத்தை, கீழாலவத்தை. மேல் = சுத்தாவத்தையின் காரியமாகிய நின்மலாவத்தை – 5 நடு = சகலாவத்தையின் காரியமாகிய மத்தியாலவத்தை – 5. கீழ் = கேவலாவத்தையின் காரியமாகிய கீழாலவத்தை–5. சாக்கிராதி ஐந்து = சாக்கிரம், சுழுத்தி, துரியம், அதீதம், துரியாதீதம் என்பன. தொடு பிரமாதியில் = பிரமாதியில் தொடு = ஆதி பிரமத்தில் தொக்க. சுத்தவித்தை = சிவ தத்துவம் ஐந்தில் ஒன்றான ஞானம் ஏறிக்கிரியை குறைந்த நிலை. திகழ் ஐந்தெழுத்து = விளங்கும் திருவைந்தெழுத்து. சிவ மந்திரம் = "சிவ" என்ற மந்திரம் (சுக்குமா சுக்குமம்). செய்வகை மயங்கி = செய்யும் முறை மயங்கி.

கீழநத்தை = கீழாலவத்தை. (மருட்கை தருவது இது) இருவகை இந்தியம் = ஞானேந்திரியம், கன்மேந்திரியம் இவற்றுடன் கூடிய. விடபம் இருபது = ஞானேந்திரியம் 5, கன்மேந்திரியம் 5, தன்மாத்திரை 5, வசனாதி 5 ஆகவும். உட்கரணம் = அந்தக்கரணம் 5, கால்பத்து = வாயு 10.

ஆக 35. இது சாக்கிர அவத்தை. ஞானேந்திரியம் கன்மேந்திரியம் 5+5. தவிரப் பிற 25 சொப்னாவத்தை, பிராணன், சித்தம், புருடன் ஆகிய மூன்று உறுவது சுழுத்தி அவத்தை. புருடன் பிராணனில் துரியாவத்தை. புருடன் மூலாதாரத்தில் துரியாதீசு அவத்தை. தெருளது = தெளிவற்ற. பிரத்தியாகாரம் = உபாதி நீக்கி உள்நோக்கல் (எண் வகை யோக நிலையின் ஒன்று) உயர்தானம் = மேல்நோக்கி உயரும் தான நிலை. சாக்கிர சாக்கிரம் = இதன் கருவி சுத்தாவத்தை 5ம், சாக்கிர துரியம் = இதன் கருவி சிவதத்துவம் சத்திதத்துவம். துரியாதீதம் = இதன் கருவி சிவதத்துவம். சிவபோகம் = ஆன்மாவின் பேரானந்த அனுபவ நிலை. சிவசாயுச்சியச் சிவானந்தம் = சிவத்துடன் கலந்ததால் ஆகிய சிவானுபவம். தகாத களங்கம் =

இருத்தலாகாததாகிய களங்கம், ஆணவம் முதலியன. தமரும் இல்லா = "யாவரும் கேளிர்" என்ற நிலை காரணமாகத் தமர் என்று இல்லாத. மருணாசம் = மருள்+நாசம் செய்யும் = உலக மயக்கினை அழித்து ஒழிக்கும். வாலீசர் = வாலிபர் என்போலியர் = என்னைப் போன்றவர். இருங்கதி = முத்தி. நிர்ப்பீச தீக்கை = ஆசாரம் இல்லாதவர்க்குச் செய்யும் தீக்கை முறை. செய்தி = செய்தலால். நீர்மை = குளிர்ச்சி, கருணைத்தன்மை. பெரியோர் பெறும் பேறு எளியரும் பெறுதலின் = பெரியவர்கள் மட்டுமே பெறுதற்குரிய திருவருட்பேற்றை எளியவரும் கூட உன் அருளால் பெறும் காரணத்தால்

பெரியார் பெறும்பேறாகிய சிவசாயுச்சியச் சிவானந்தம், எளியரும் நம்குருமூர்த்தியால் பெறுவர் என்க. மன்னுயிர் ஒன்றே. . . . தச காரியத்தின் வசமுற இருத்தி – எண்ணலங்காரம்.

## 32. எழுசீர்கழிநெடில் ஆசிரிய விருத்தம்

*பண்: சாதாரி* *(சிந்து பைரவி)* *தாளம் : சாப்பு*

பணிந்தி டும்சிவ பத்தர் பாலூறு
பத்தி யும்பவ பீதியும்
அணிந்த சின்னமும் மெய்ய டக்கமும்
ஆக மத்தில்அ மைந்தவா
துணிந்த செய்கையும் முத்தி யோடுதொ
டர்ச்சி யும்பல சோணைவாய்த்
திணிந்து தேவசி காம ணிக்(கு) உறு
செய்தி யைப்புகல் சின்னமே.

### *குறிப்புரை:*

உறு = மிகுந்த. பவபீதி = பிறவி பற்றிய பேரச்சம். சின்னம் = திருநீறு உருத்திராக்கம் முதலியன. அமைந்தவா = கூறியவாறு. துணிந்த செய்கை = செய்யத்துணிந்த செயல். தொடர்ச்சி = உரிமை பூணல். சோணை = அருணை. திணிந்து = நெருங்கி இருந்து. தேவசிகாமணிக்கு உறுசெய்தி = தேவசிகாமணியின் மிகுந்த ஒழுக்க நெறி. புகல் சின்னம் = எடுத்துக்கூறும் அடையாளம். பல = இவ்வாறு பலப்பலவாம்.

தேவசிகாமணிக்குறு செய்தியைப் புகல் சின்னம். சோணை வாய்த் திணிந்து பணிந்திடும். . . பல என்று கூட்டி முடிக்க. குருமூர்த்தியின் பெருமையை, அடியார் வழிக்காட்டுகிறார்.

## 33. நேரிசை வெண்பா

*பண் : சாதாரி* *(சாரமதி)* *சுத்தாங்கம்*

சின்னமா மேசஞ் சிதம்தகித்த வித்து எனலாம்
அன்னதீக் காங்கத்தாகாமியம் போந்(து) – என் அருணைச்
சித்தேகத் தேவ சிகாமணிசெய் யார்அத்தம்
அத்தேகத் தோ(டு)அறும்எல் லாம்.

### குறிப்புரை:

சின்னமாமே = இதுவே அடையாளமாகும். சஞ்சிதம் தகித்த வித்து = முன் அனுபவித்தது போக எஞ்சிய வினையால் துன்புறும் வித்து (உயிர்). அன்னதீ காங்க = சஞ்சிதத் தீ ஆன்மாவைச் சுட. அத்தா = பரம்பொருள். காமியம் போந்து = காமிய குருவடிவாய் வந்து (காமிய குரு = இறைபக்தியும், அறமும் போதிக்கும் குரு) சித்தேகம் = ஞான உருவுடன் கூடிய. அத்தம் செய்யார் = பாதியளவு அருளுகை மட்டும் செய்யார். அத்தேகத்தொடும் = உயிர்தான் எடுத்த அந்தப் பிறவியுடன். எல்லாம் அறும் = மலமாதியறும்; வீடுறும் என்க. காங்கத்தா, காமியம் போந்து = காங்க + அத்தா + காமியம் + போந்து. குருமூர்த்தி பால் அரைகுறை அருளுகை இல்லை. முழுமையான அருளுகையே உண்டு. இப்பாடல் உவமையணி

## 34. கட்டளைக் கலித்துறை

*பண்: திருக்குறுந்தொகை* *(சண்முகப்பிரியா)* *சுத்தாங்கம்*

எல்ஆரும் தீபம் கொழுந்துசெவ் வானம் இளந்தளிர்மின்
மல்ஆர் மலர்நெய் வழிதேன் புகைமென் மகரந்தமாய்ச்
சொல்ஆரும் தேவ சிகாமணி சோணைத் துருமம் ஒன்று
பல்லார் விழிவண்டு சூழ்தர முத்திப் பலம் தருமே.

### குறிப்புரை:

எல்ஆரும் தீபம் கொழுந்து = ஒளி நிறைந்த தீபம் போன்ற கொழுந்து. மின்மல்ஆர்மலர் = மின்னல் போன்று ஒளிவீசும் வளம் நிறைந்த மலர். நெய்வழிதேன் = நெய் போன்று வழியும் தேன். சொல் = புகழ். துருமம் = செழுமரம். பல்லார் = பலர். விழிவண்டு சூழ்தர = விழியாகிய வண்டுகள் சூழ, மொய்க்க. முத்திப்பலம் = முத்தியாகிய பயன், பழம். தீபம் = கொழுந்து, செவ்வானம், இளந்தளிர், மின் = மலர். நெய் = தேன்; புகை – மகரந்தம் – உவமைகள்

தெய்வசிகாமணித் துருமம்; விழிவண்டு; முத்திப்பலம் – உருவகங்கள் இப்பாடல் உருவக உவமையணி.

இருத்தலாகாததாகிய களங்கம், ஆணவம் முதலியன. தமரும் இல்லா = "யாவரும் கேளிர்" என்ற நிலை காரணமாகத் தமர் என்று இல்லாத. மருணாசம் = மருள்+நாசம் செய்யும் = உலக மயக்கினை அழித்து ஒழிக்கும். வாலீசர் = வாலிபர் என்போலியர் = என்னைப் போன்றவர். இருங்கதி = முத்தி. நிர்ப்பீச தீக்கை = ஆசாரம் இல்லாதவர்க்குச் செய்யும் தீக்கை முறை. செய்தி = செய்தலால். நீர்மை = குளிர்ச்சி, கருணைத்தன்மை. பெரியோர் பெறும் பேறு எளியரும் பெறுதலின் = பெரியவர்கள் மட்டுமே பெறுதற்குரிய திருவருட்பேற்றை எளியவரும் கூட உன் அருளால் பெறும் காரணத்தால்

பெரியார் பெறும்பேறாகிய சிவசாயுச்சியச் சிவானந்தம், எளியரும் நம்குருமூர்த்தியால் பெறுவர் என்க. மன்னுயிர் ஒன்றே. . . . தச காரியத்தின் வசமுற இருத்தி – எண்ணலங்காரம்.

## 32. எழுசீர்கழிநெடில் ஆசிரிய விருத்தம்

*பண்: சாதாரி* *(சிந்து பைரவி)* *தாளம் : சாப்பு*

பணிந்தி டும்சிவ பத்தர் பாலுறு
பத்தி யும்பவ பீதியும்
அணிந்த சின்னமும் மெய்ய டக்கமும்
ஆக மத்தில்அ மைந்தவா
துணிந்த செய்கையும் முத்தி யோடுதொ
டர்ச்சி யும்பல சோணைவாய்த்
திணிந்து தேவசி காம ணிக்(கு)உறு
செய்தி யைப்புகல் சின்னமே.

*குறிப்புரை:*

உறு = மிகுந்த. பவபீதி = பிறவி பற்றிய பேரச்சம். சின்னம் = திருநீறு உருத்திராக்கம் முதலியன. அமைந்தவா = கூறியவாறு. துணிந்த செய்கை = செய்யத்துணிந்த செயல். தொடர்ச்சி = உரிமை பூணல். சோணை = அருணை. திணிந்து = நெருங்கி இருந்து. தேவசிகாமணிக்கு உறுசெய்தி = தேவசிகாமணியின் மிகுந்த ஒழுக்க நெறி. புகல் சின்னம் = எடுத்துக்கூறும் அடையாளம். பல = இவ்வாறு பலப்பலவாம்.

தேவசிகாமணிக்குறு செய்தியைப் புகல் சின்னம். சோணை வாய்த் திணிந்து பணிந்திடும். . . பல என்று கூட்டி முடிக்க. குருமூர்த்தியின் பெருமையை, அடியார் வழிக்காட்டுகிறார்.

## 33. நேரிசை வெண்பா

*பண் : சாதாரி* *(சாரமதி)* *சுத்தாங்கம்*

**சின்னமா மேசஞ் சிதம்தகித்த வித்து எனலாம்**
**அன்னதீக் காங்கத்தாகாமியம் போந்(து) – என் அருணைச்**
**சித்தேகத் தேவ சிகாமணிசெய் யார்அத்தம்**
**அத்தேகத் தோ(டு)அறும்எல் லாம்.**

### குறிப்புரை:

சின்னமாமே = இதுவே அடையாளமாகும். சஞ்சிதம் தகித்த வித்து = முன் அனுபவித்தது போக எஞ்சிய வினையால் துன்புறும் வித்து (உயிர்). அன்னதீ காங்க = சஞ்சிதத் தீ ஆன்மாவைச் சுட. அத்தா = பரம்பொருள். காமியம் போந்து = காமிய குருவடிவாய் வந்து (காமிய குரு = இறைபக்தியும், அறமும் போதிக்கும் குரு) சித்தேகம் = ஞான உருவுடன் கூடிய. அத்தம் செய்யார் = பாதியளவு அருளுகை மட்டும் செய்யார். அத்தேகத்தொடும் = உயிர்தான் எடுத்த அந்தப் பிறவியுடன். எல்லாம் அறும் = மலமாதியறும்; வீடுறும் என்க. காங்கத்தா, காமியம் போந்து = காங்க + அத்தா + காமியம் + போந்து. குருமூர்த்தி பால் அரைகுறை அருளுகை இல்லை. முழுமையான அருளுகையே உண்டு. இப்பாடல் உவமையணி

## 34. கட்டளைக் கலித்துறை

*பண்: திருக்குறுந்தொகை* *(சண்முகப்பிரியா)* *சுத்தாங்கம்*

**எல்ஆரும் தீபம் கொழுந்துசெவ் வானம் இளந்தளிர்மின்**
**மல்ஆர் மலர்நெய் வழிதேன் புகைமென் மகரந்தமாய்ச்**
**சொல்ஆரும் தேவ சிகாமணி சோணைத் துருமம் ஒன்று**
**பல்லார் விழிவண்டு சூழ்தர முத்திப் பலம் தருமே.**

### குறிப்புரை:

எல்ஆரும் தீபம் கொழுந்து = ஒளி நிறைந்த தீபம் போன்ற கொழுந்து. மின்மல்ஆர்மலர் = மின்னல் போன்று ஒளிவீசும் வளம் நிறைந்த மலர். நெய்வழிதேன் = நெய் போன்று வழியும் தேன். சொல் = புகழ். துருமம் = செழுமரம். பல்லார் = பலர். விழிவண்டு சூழ்தர = விழியாகிய வண்டுகள் சூழ, மொய்க்க. முத்திப்பலம் = முத்தியாகிய பயன், பழம். தீபம் = கொழுந்து, செவ்வானம், இளந்தளிர், மின் = மலர். நெய் = தேன்; புகை – மகரந்தம் – உவமைகள் •

தெய்வசிகாமணித் துருமம்; விழிவண்டு; முத்திப்பலம் – உருவகங்கள் இப்பாடல் உருவக உவமையணி.

## 35. நேரிசை ஆசிரியப்பா

இராகமாலிகை சுத்தாங்கம்

தருகீழ் முத்தித் தலைமை சான்ற
பிரகிரு தியில்வரு புவனம் பேசில்
சேர்பெரும் பூதம் சிறந்ததன் மாத்திரை
வார்இந் திரியம் மனம்அகங் காரம்
மதிகுணம் மான்மேல் இருபுவ னத்து

பிசாசுடன் இராக்கதர் பேரா இயக்கர்
யாழோர் இந்திரன் சோமர்பிர சாபதி
இவ்வெழு பேர்க்கும் ஒவ்வொன் றாக
எறிய சித்தியும் இவர்கள் மேலே
திசைமுகன் எண்எண் சித்தியும் படைப்பப்

பிரத்திய ரூபப் பிராகிரு தர்களாய்த்
தத்துவம் பத்தினும் சார்தரும் அணுக்களை
ஆன்ம வாதிய ராக நீக்கிப்
பவமில் புருடோ பரிச்சிவ வாதரில்
சத்தினி பாதத் தன்மை நோக்கிச்

சிவசத் திகளால் தீக்கைசெய்(து) அருளி
உருமலக் குரம்பையை நிருமலம் ஆக்கி
இருசெவி யிடத்தின் இந்திரா தியரும்
மருவுறு துவக்கின் மாதரி தானும்
மணிவிழிக்(கு) இரவியும் வாயிடை வருணனும்

கனிதரு நாசியில் காசினி தானும்
வாக்கில் அங்கியும் மேற்கைஇந் திரனும்
பாதம் மாலும் பாயுமித் திரனும்
உபத்தம் விதியும் ஓர்மனம் மதியும்
உறைவ(து) ஆகி நிறைவதும் அன்றிச்

சிந்தனை செய்சிவ மந்திரம் ஆக்கி
ஐவகை உயிரை மெய்வகை நீக்கிப்
புத்திமுத் தியும்மேல் வியத்தியும் நோக்கி

மால்அயன் பேறும் வறுமையின் வறிதா
உம்பர் வாழ்வும் கும்பிவாழ்(வு) ஆக

வராகத் தின்கீழ் ஆனமுத் திகளும்
வாய்த்த கானிற் பேய்த்தேர் ஆக
வளைவில் ஞானத்(து) அளவில்பூ ரணமாம்
இருவகை இருமூன்று இன்ப வியோம
ஒருபெருஞ் செல்வத் திருஅர(சு) ஆக்கிய

கருணா சலத்திரு அருணாச லேச
மெய்வசி காமணித் தெய்வசி காமணி
தான்ஆ சாரமெய்ஞ் ஞானா சாரிய
காக்கையைத் தன்நிறம் ஆக்குமே ருப்போல்
என்போ லியரையும் நின்போல் ஆக்கலின்

தொழற்(கு)உறும் விசிட்டாத் துவிதா தியர்போல்
அழுக்கா(று) உறாநின் அருட்பெரு வாரி
வாழி வாழி வாழி
பாழிமா நிலத்(து)உயிர் பலம்பெறப் பலவே.

***குறிப்புரை:***

தருகீழ் = இறைவனிடம் பெறும். முத்தி = முத்தி தருவதில். பிரகிருதியால் வருபுவனம் = பிரகிருதி மாயையால் வந்த இவ்வுலகம். பெரும்பூதம் = நிலம், தீ, நீர், வளி, விண். தன்மாத்திரை = சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம். வார் = நுட்பமான. இந்திரியம் = ஞானேந்திரியம், கன்மேந்திரியங்கள். மான் = மானுடன். சோமர் = சந்திரர். பிரசாபதி = சூரியருள் ஒருவர். எண் எண் சித்தி = எண்ணத்தக்க எட்டு சித்திகள். அணிமா, மகிமா, இலகிமா, கரிமா, பிராத்தி, பிராகாமியம், வசித்துவம், ஈசத்துவம், என்பன. படைப்ப = பெற்றிருக்கச் செய்து. பிரத்திய ரூபப் பிராகிருதர்களாய் = கட்புலனாகும் உருவமுடைய உண்மையறிவில்லாதவர்களாய். அணு = ஆன்மா. பவம் = பிறப்பு. சத்தினி பாதத் தன்மை = அருட்சத்தி பதியும் தன்மை. உரு = மிகுந்த மலக் குரம்பையை = மலத்துக்குக் காரணமான உடம்பை. நிருமலமாக்கி = மலமற்றதாக்கி. மரு = மணம். துவக்கு = மார்பு. மாதரி = காளி. இரவி = சூரியருள் ஒருவன். அங்கி = அக்கினி. மேற்கை = தோள். பாயு = குதம். மித்திரன் = 12 சூரியர்களில் ஒருவன். உபத்தம் = குறி, விதி = பிரமன். ஐவகை உயிர் = அந்தரான்மா, சிவான்மா, தத்துவான்மா, பூதான்மா, மந்திரான்மா என்ற ஐவகை ஆன்மாக்கள். மெய்வகை நீக்கி = இகழ்ச்சிப் பண்பில் நீக்கி. மேல் வியாதி = இனிச் செய்ய வேண்டிய காரியம். வறுமையின்

வறிதா = வறுமையுற்று வீணாகும்படிச் செய்து. கும்பி வாழ்வு = நகர வாழ்வு. கானில் = வனத்தில், பாலைவனத்தில். வராகத்தின் கீழ் ஆன முத்தி = திருமாலின் கீழான முத்தி நிலைகள். பேய்த்தேர் = பொய்வடிவம். வளைவில் ஞானம் = வளையாத, செம்மையான ஞானம். அளவில் பூரணம் = அளவிடவியலாத முழுமை. இன்ப வியோம = இன்பம் தரும் மேலுலகத்து. திருவரசு = தெய்வத்தனமை வாய்ந்த அரசு. கருணாசலம் = கருணை+அசலம் = கருணை மலை. மெய்வசிகாமணி = மெய்யே வாழும் மாமருந்தாகிய. நின்போல் ஆக்கலின் = நின் நிலைக்கு உயர்த்துவதால். தொழற்குறும் = தொழ நெருங்கும். விசிட்டாத்துவிதாதியர் = விசிட்டாத்துவிதம் முதலிய பிறநெறியாளர். அருட்பெருவாரி = அருட்பெருங்கடல். பாழி = கடல். உயிர்பலம் பெறப் பலவே = உயிர், பல பலம் பெறவே என்று மாற்றுக. உயிர் பல்வகைப் பயனும் பெற்றுய்ய.

உயிர், பல பலம் பெறவே நின்அருட்பெருவாரி வாழி வாழி வாழி என்று கூட்டி முடிக்க. காக்கையைத். . . . ஆக்கலின்— உவமையணி.

## 36. அறுசீர் கழிநெடில் ஆசிரிய விருத்தம்

*பண்: கொல்லி* *(புன்னாகவராளி)* *தாளம் : ரூபகம்*

பலம்த ரும்பெரி(து) இகம்ப ரம்தன்னில்
பரத்தின்மேல் பரமான
புலம்த ரும்தரும் இருவகை முத்தியும்
போகத்தின் பொலிவான
நலந்த ரும்தரும் இருவகை முத்தியும்
நல்லரு ணையின்மேவு
வலம்த ரும்புகழ்த் தேவ சிகாமணி
வான்மணி தரா(து) ஒன்றே.

*குறிப்புரை:*

பெரிது பலம் தரும் = அளவு கடந்த பலன் தரும். இகம்பரம் = இம்மை மறுமையில். பரத்தின் மேல் பரமான = மேலானதற்கும் மேலான. புலம் = அறிவு, ஞானம். இருவகை முத்தி = அபரமுத்தி, பரமுத்தி. போகத்தின் பொலிவான = இன்பத்தினும் பொலிவு உடைய. நலம் = நன்மை. மேவு = எழுந்தருளிய. வலம்தரும் புகழ் = வெற்றி தரும் புகழுடைய. வான்மணி = மேலான மணி, வானத்து மணியுமாம். ஒன்று தராது = ஒரு பயன் மட்டுமே தராது; பல பயன் தரும் என்க. நல்லருணை; போகத்தின் பொலிவான நலம் தரும் இருவகை முக்தியும் தரும்.

நல்லருணையின் மேவு வலம் தரும் தெய்வசிகாமணியும்; ஒன்று தராது. பெரிது பலம் தரும். இகத்தில் பரத்தின் மேற்பரமான புலம் தரும். பரத்தில் இருவகை முத்தியும் தரும் என்க. இப்பாடல் நிரல் நிறையணி. சொற்பொருட் பின்வரு நிலையணியுமாம்.

## 37. பஃறொடை வெண்பா

*பண்: திருக்குறுந்தொகை (ஆனந்தபைரவி) தாளம்: ஆதி*

ஒன்றிய சந்தசுதாள் ஓர்கற்பம் கையாக
வென்றி வியாகரண மேஆ னனம்ஆக அன்றியும்
சோதிடம் கண்ணா நிருத்தம் செவியாக
நன்றுடைய சிட்சையே நாசி வடிவாக
நின்றஆ றங்கத்தில் நீள்வேதம் மாமேனி
கன்றறிய அந்தக் கரணம் சிவாகமமாச்
சென்(று)அருணைத் தேவ சிகாமணிச்சீ வன் செலுத்தில்
அன்றிவாரா(து) உய்வ(து)அரு ளால்.

### குறிப்புரை:

சுதாள் = தூய திருவடி. சந்தம் = சந்தோபிசிதம். (வேத சந்த பேதங்களுக்கு அக்கர சங்கியை கற்பிப்பது) கற்பம் = வைதீக கருமங்களுக்குப் பிரயோகம் கூறுவது. வென்றி = வெற்றி. (எதுகை நோக்கி மெலிந்தது) வியாகரணம் = இலக்கணம். ஆனனம் = முகம். நிருத்தம் = வேத பத விவரணம் கூறுவது. சிட்சை = வேத உச்சாரண இலக்கணம் கூறுவது. (சந்தம், கற்பம், வியாகரணம், சோதிடம், நிருத்தம், சிட்சை என்பன ஆறங்கங்கள்) சென்று = பொருந்திய. சீவன் = உயிர்தரு மருந்து , குருமூர்த்தி பரம்பொருள். அருளால் செலுத்திலன்றி = கருணையால் வழி நடத்தினாலன்றி. உய்வது வராது = உய்தி கிடைக்காது.

<table>
<tr><td>தாள்</td><td>=</td><td>சந்தோபிசிதம்</td><td rowspan="6">ஆறங்கங்கள்</td><td rowspan="8">உருவகங்கள்</td></tr>
<tr><td>கை</td><td>=</td><td>கற்பம்</td></tr>
<tr><td>முகம்</td><td>=</td><td>ஆனனம்</td></tr>
<tr><td>கண்</td><td>=</td><td>சோதிடம்</td></tr>
<tr><td>செவி</td><td>=</td><td>நிருத்தம்</td></tr>
<tr><td>நாசி</td><td>=</td><td>சிட்சை</td></tr>
<tr><td>மேனி</td><td>=</td><td>வேதம்</td><td rowspan="2"></td></tr>
<tr><td>அந்தக்கரணம்</td><td>=</td><td>சிவாகமம்</td></tr>
</table>

தேவசிகாமணிச் சீவன், அருளால் செலுத்திலன்றி, உய்வது வாராது என்று கூட்டுக. இப்பாடல் முற்றுருவகவணி.

## 38. கட்டளைக் கலித்துறை

*பண்: திருக்குறுந்தொகை (மோகனம்)* *சுத்தாங்கம்*

அருள்உண் டெனில்உண்(டு) அறங்களெல் லாம்அவ் அருளு(ம்)நல்ல
பொருள்உண் டெனில்உண்(டு) போகியர்க் கேஇவர் போகமல
இருள்உண் டெனில்உண்(டு) இங்கெல்லாம் வராமல் இருத்து(ம்) ஒரு
தெருள்உண் டெனில்உண்(டு) தேவ சிகாமணிச் சிற்குருவே.

### குறிப்புரை:

அருள் = கருணை. பொருள் = செல்வம். போகியர் = இவ்வுலக இன்பம் நுகர்வார். இவர் போகமல இருள் உண்டெனில் உண்டு = ஏறிவளரும் போகத்தாலான மல இருள் உண்டென்றால் (துன்பம்) உண்டு. இங்கெல்லாம் = இவ்விடங்களில் எல்லாம். வராமல் இருத்தும் = மல இருளால் உண்டாகும் துன்பம் வராமல் தடுத்து நிறுத்தும். சிற்குருதெருள் = சிற்குருவின் ஞானம். உன்டெனில் = நமக்கு வாய்க்குமெனில். உண்டு = நலமெலாம் உண்டு. துன்பம் நலம் என்பன இயைபு நோக்கி வருவிக்கப் பெற்றன. இங்கெல்லாம் துன்பம் வாராமல் இருத்தும் ஒரு தேவசிகாமணிச் சிற்குரு தெருள் உண்டெனில் உண்டு என்று இயைக்க. இப்பாடல் சொற்பொருள் பின்வருநிலையணி.

## 39. நேரிசை ஆசிரியப்பா

*இராகமாலிகை* *சுத்தாங்கம்*

குருவேறு வேறாய்க் குல(வு)ஆன்ம வாதம்
திருவருள் படைத்த சிவவாதம் என்றிங்(கு)
இருவகை வாதத்(து) ஒருமுதல் வாதத்து
வாகியம் வைதிகம் ஆகிய இரண்டினில்
ஒருகுரு உரைத்த உலகா யதமும்

அருகத் தரில்வழங்(கு) ஆர்கத நூலும்
பரமெனும் சுகத பௌத்தநூ லும்என்(று)
ஆன வாகிய ஞானம் மூன்றும்
எய்திய விவேக வைதிக மார்க்கத்(து)
அங்கம் உபாங்கம் உபவேதம் ஆகிய

அங்கி அகலா அங்கவே தம்புகல்
வாய்த்த லௌகிகம் வைதிக சாத்திரம்

ஆத்தியான் மிகம்அதி மார்க்கம்மந் திரமென்று
ஐவகை ஆகிய மெய்வகை நூல்களில்
இட்ட மாகிய திட்ட பலஞ்செய்யும்

வைத்தியம் தண்டம் வழங்குலௌ கிகமும்
திட்டா திட்டம் கிட்டிய பலங்கள்
பிரியா வேதக் கிரியா காண்டத்து
மீமாஞ்சை நியாயம் மிகுவை சேடிகம்
என்னும் வைதிகம் மன்னு ஞானமும்

அதிட்ட பலமெனும் ஆன்ம ஞானத்து
வேதாந்த சாங்கிய மிகுபா தஞ்சலமென்(று)
அளவில் ஆத்தி ஆன்மிக ஞானமும்
தேர்ந்(து)உற வல்ல சிவவா தத்தில்
சார்ந்(து)உறு சாமா னியசை வத்துள்

பாசு பதம்கா பாலம்மா விரதமற்(று)
ஆசி லாத அதிமார்க்க ஞானமும்
அருளும் சதாசிவன் அதேவத் திரமாம்
தத்புரு டாதியி னிற்பிரே ரிக்கும்
அணுதற் புருடர் ஆதியோர் மொழிந்த

வதச்சு ரோதசென் நாயமந் திரத்துள்
காருட மேதக் கிணம்வாமம் பூதம்என்(று)
ஈரிரு சாத்திரம் எனலாம் இவற்றுள்
புருடமே பொருளாய்ப் புகன்றுமந் திரமருந்(து)
உரைசெய்கா ருடமென்(று) உள்ள ஞானமும்

அகோரமே பிரமம் ஆம்அப் பிரமும்
யோகத்(து) உறும்என்(று) ஓர்சத் துருசெய
மந்திரம் சொல்ல வல்லதக் கிணமும்
வாமமே பொருள்என வழுத்தி வசியாதி
மாமந் திரம்புகல் வாமதந் திரமும்

சத்தியோ சாதம் தானே பொருள்என
வாய்க்கும்பூ தாதியை மந்திர மருந்தால்
போக்குதல் புகன்ற பூததந் திரமும்

என்றஞா னமும்இங்(கு) ஒன்றின்மேல் உயர்ந்து
முன்னம் பராவச் சொன்ன சதாசிவர்

அந்தமில் அருளால் முந்திய படைப்பில்
சத்த பேதத் தன்மையில் சமைந்தே
ஊர்த்துவ முகம்தனில் வாய்த்(து)இனி தான
சிவசம வேதச் சின்மயம் ஒன்றே
சிவபே தங்களில் செப்பும்ஈ ரைந்தாய்

உருத்திர பேதத்(து) ஓர்பதி னெட்டாய்க்
காமிகம், யோகசம், சிந்தியம், காரணம்,
அசிதம், தீத்தம், அரிய சூக்குமம்
அப்பால் சகச்திரம், அஞ்சு மானோடு,
சுப்பிர பேதம்; விசயம்நிச் சுவாசம்,

அருட்சுவா யம்புவம், அனலம், வீரம்
வரம்மிகு ரௌரம், மகுடம், விமலம்,
சந்திர ஞானம் தன்னொடு, விம்பம்,
புரோட்கீ தத்தொடு, புகலும் லளிதம்,
சித்த தந்திரம், திகழ்சந் தானம்,

பகர்சரு வோத்தம் பார மேசுரம்
கிரணம்,வா துளம்எனக் கிளக்கும் நாலேழு
போதஆ கமங்கள் பாதநால் வகையாய்ச்
சுத்த மாயையில் வைத்த வாறே
அனந்தர்சீ கண்டர் அருள்உமை கணபதி

குமரன் அரிஅயன் குலிசன் வானோர்
முனிவர் வழிவழி இனிதுஉணர்ந்(து) அன்பின்
முனிவர் வழிஇம் முதுநிலத்(து) உதிப்ப
வந்தஞா னமும்என்(று) அறிந்தஞா னங்கள்
அவனி முதலா வனாசிரு தாந்தத்(து)

ஏற்றிய விளக்கு மேற்பரி தியுமாய்ச்
செப்பிய சுத்த சிவமேல் ஆதலின்
திருஅருணாசலத் தேவ சிகாமணி
குருஅரு ணாசலக் குளிர்நெடுஞ் சாரலில்
கார்த்திகை மலர்ந்த காந்தட் பரப்பும்

சீர்த்திகொள் சிகரத் தீபமும் போலும்
குன்றின்மேல் இட்ட கொழுஞ்சுடர்
துன்றிய சுத்தாத் துவிதநம் குருவே.

### *குறிப்புரை:*

குருவேறு வேறாய் = வேறு வேறு பெருமையுடையனவாய். ஆன்மவாதம் = ஆன்மாவை முதன்மைப்படுத்துவது. சிவவாதம் = சிவத்தை முதன்மைப்படுத்துவது. வாகியம் = புறச்சமயம். வைதிகம் = வேதநெறிச் சமயம். உலகாயதம் = சடமாயாவாதம். அருகத்தர் = சமணர். ஆர்கதநூல் = சமண சமய நூல். சுகத = பௌத்தரின். பௌத்த நூல் = திரிபிடகம். ஞானம் மூன்றும் எய்திய = உலகாயதம், ஆருகதம், பௌத்தம் ஆகியவற்றில் உள்ள மூன்று ஞானமும் பெற்ற. விவேக வைதிக மார்க்கம் = ஆராய்ச்சியடிப்படையிலான வேதநெறி. அங்கம் = வேதாங்கம். (சிட்சை, கற்பம், வியாகரணம், நிருத்தம், சந்தோபிசிதம், சோதிடம்). உபாங்கம் = வேதோபாங்கம். (வேதத்துக்குத் துணையான சிற்றுறுப்புகள், புராணம், நியாயம், மீமாஞ்சை, தரும சாத்திரம்) அங்கவேதம் = உபவேதம். (ஆயுள் வேதம், தனுர்வேதம், காந்தர்வ வேதம், அர்த்த வேதம்). திட்ட பலன் = திட்டமிட்ட பலன், சரிக்குச் சரியான பலன்.

மீமாஞ்சை, நியாயம், வைசேடிகம் இவை வைதீக ஞான சாத்திரங்கள். இம்மை மறுமையில் நலம் தருவன.

வேதாந்தம், சாங்கியம், பாதஞ்சலம் இவை ஆதித்தியான் மிக சாத்திரங்கள். ஆன்ம ஞானம் பலிப்பன.

பாசுபதம், காபாலம், மாவிரதம் இவை ஆதி மார்க்கீக சாத்திரங்கள்.

காருடம், தக்கிணம், வாமம், பூதம் ஆகிய நான்கும் மந்திரம் சாத்திரங்கள்.

பராவ = போற்ற. சின்மயம் = ஞானமயம். சிவபோதம் ஈரைந்து = காமிகம் முதல் சுப்பிரபேதம் முடிய உள்ள 10 ஆகமங்களும் சிவபேதம் கூறுவன. உருத்திரபேதத்து ஓர் பதினெட்டாய் = உருத்திரபேதம் கூறும் ஆகமங்கள் 18 (விசயம் முதல் வாதுளம் ஈறானவை). போதம் = ஞானம். பாதம் நால்வகை = சரியா பாதம், கிரியா பாதம், யோக பாதம், ஞான பாதம் என்பன. அனந்தர், "சீகண்டர் . . . . முனிவர் வழிவழி" என்பது ஆகமம் வந்த வழி. அவனி முதலாவனா சிருதாந்தம் = (அவனி முதலா சிருதவனாந்தம் என்று மாற்றிக் கூட்டுக) பிரபஞ்சம் முதல் செவ்வியுடைய வீடுவரை. ஏற்றிய விளக்கும் மெய்ப்பகுதியுமாய் = ஏற்றி வைத்த விளக்காகவும், வானத்து ஞாயிறாகவும் விளங்கி. ஆகமங்கள் அவனிக்குப்

பருதியாயும், வீட்டுக்கு விளக்காயும் விளங்குகின்றன என்று மாற்றிக் கூட்டுக. கார்த்திகை = கார்த்திகைத் திங்கள். காந்தள் பரப்பு = செந்நிறமுள் ஒருவகைப் பூவின்பரப்பு. சிகரதீபம் = அண்ணாமலை உச்சித் தீபம். கொழுஞ்சுடர் துன்றிய = கொழுஞ்சுடருடன் இரண்டறக் கலந்த. சுத்தாத்துவிதம் = சீவான்மா, பரமான்மாவுடன் இரண்டறக் கலந்து அனுபவிக்கும் நிலை.

ஏற்றிய விளக்கும் மேல்பரிதியுமாய் விளங்குவது பரசிவம். காந்தட் பரப்பும் சிகர தீபமுமாய் விளங்குகிறார் சுத்தாத்துவித நம் குருமூர்த்தி.

அவனிமுதலா . . . பருதியுமாய் – எதிர் நிரல் நிறையணி. காந்தட் பரப்பும் . . . குருவே – பல்பொருள் உவமையணி.

## 40. அறுசீர்கழிநெடில் ஆசிரிய விருத்தம்

*பண்: நட்டராகம்* *(மத்திமாவதி)* *தாளம்: ஆதி*

குருமணி அருணை வாழும் குருமணி குணமே ஆன
திருமணி தேவ தேவ சிகாமணி செம்பொற் றாளே
தருமணி வனசம் போலத் தான்குவி யாது சான்றோர்
மருமணி மதியுள் ளேயும் மலர்தரு வனசப் பூவே.

### குறிப்புரை:

குருமணி அருணை வாழும் குருமணி = குருமூர்த்தியானவர் திருவண்ணாமலையில் எழுந்தருளியுள்ள ஒளி பொருந்திய மணியாவார். திருமணி = தெய்வமணி. தேவ தேவ சிகாமணி = தேவர்க்குத் தேவரும் தலையிற் சூடி மகிழும் மணி. செம்பொன்தாளே = தனது செம்மையான திருவடிகளையே. வனசம் = தாமரை. மருமணி மதியுள்ளேயும் = மணமிக்க அழகிய அறிவிலும் மணத்தின் பயன் தன்னிருப்பை அறிவித்து ஈர்த்தல் அழகின் பயன் நலஞ்செய்தல். இவ்விரண்டும் உடையது மதியாதலின் இதற்கு இவை அடையாயின. "சான்றோர் மதியுள்ளேயும்" என்ற உம்மையால் சான்றாண்மை மாற்றுக் குறைந்தாரிடத்தும் என்பது பெறப்படும். வனசப்பூ மலர்ந்து குவியும் இயல்புடையது. இவர் திருவடி வனசப்பூ என்றுமே குவியாது; மலர்ந்தே நலம் தரும் என்பதாம்.

இப்பாடல் சொற்பொருள் பின்வரு நிலையணி, வேற்றுமையணியுமாம்.

## வாழ்த்து

*பண்: செவ்வழி* *(மத்திமாவதி)* *சுத்தாங்கம்*

**சீர்வாழி தெய்வ சிகாமணி சீர்அருணை**
**ஊர்வாழி வாழி உலகெல்லாம் – கார்வாழி**
**சித்தமிழ்தம் ஆன சிவாகமம் வாழிசெழு**
**முத்தமிழும் வாழி முறை.**

### *குறிப்புரை:*

கார் = சூல் கொண்ட மேகம். சித்தமிழ்தம் = அறிவுக்கு அமுதான. சிவாகமம் = சிவபெருமான் அருளிய 28 ஆகமங்கள். அவை காமிகம் முதல் வாதுளம் ஈறாம். இப்பாடல் சொற்பொருள் பின்வரு நிலையணி.

## கட்டளைக் கலித்துறை

*பண்: நட்டராகம்* *(மத்திமாவதி)* *தாளம்: ஆதி*

**அணிமாலை காலை அணிமாலை நீர்கொண்(டு) அயனுடனே**
**பணிமாலை ஆளும் பரன்அரு ணேசன் பதத்தைநித்தம்**
**எணிமாலை நீக்கிய தேவ சிகாமணிக் கேதமிழ்நான்**
**மணிமாலை நூலை வனைந்தான் குமார மகாமுனியே.**

### *குறிப்புரை:*

அணிமாலை = அழகிய மாலைகளும். காலையணிமாலை = திருவடிக்கு அணி செய்யும் மாலைகளும். நீர் = திருமஞ்சன நீரும். அயன் = பிரமதேவன். பணி = வணங்கும். மால் + ஐ = திருமாலை. ஆளும் = ஆட்கொள்ளும். பரன் அருணேசன் = பராபரனாகிய அண்ணாமலையார். பதம் = திருவடி. எணி = எண்ணி. (இடைக் குறை). மால் + ஐ நீக்கிய = மயக்கம் நீக்கிய. நான்மணிமாலை = நால்வகை மணி கொண்டமைந்த மாலை போல, வெண்பா, கட்டளைக் கலித்துறை, ஆசிரியப்பா, விருத்தம் என்ற நால்வகைப் பாக்களால் அந்தாதித் தொடையமைந்த 40 பாடல்களில் உள்ள இந்நூல். வனைந்தான் = உருவமையச் செய்தான். சொற்பொருள் பின்வருநிலையணி.

அழகிய மாலைப் பொழுதிலும், காலைப் பொழுதிலும் அழகிய மாலைகளும் நீரும் கொண்டு எனினும் அமையும்.

16. சுவாமிநாத தேசிகர்
17. நாகலிங்க தேசிகர்
18. குமரசாமி தேசிகர்
19. திருச்சிற்றம்பல தேசிகர் I
20. சிதம்பரநாத தேசிகர்
21. சிவக்கொழுந்து தேசிகர்
22. நமச்சிவாய தேசிகர்
23. அகத்தீசுவர தேசிகர்
24. பொன்னம்பல தேசிகர் I
25. ஏகாம்பர தேசிகர்
26. வைத்தியநாத தேசிகர்
27. அண்ணாமலை தேசிகர் I
28. ஞானப்பிரகாச தேசிகர்
29. ஆறுமுக தேசிகர் I
30. திருச்சிற்றம்பல தேசிகர் II
31. மருதநாயக தேசிகர்
32. தாண்டவராய தேசிகர் II
33. சிவசுப்பிரமணிய தேசிகர்
34. சாம்பசிவ தேசிகர்
35. ஆறுமுக தேசிகர் II
36. அருணாசல தேசிகர் I
37. பொன்னம்பல தேசிகர் II
38. ஆறுமுக தேசிகர் III
39. ஆறுமுக தேசிகர் IV
40. தாண்டவராய தேசிகர் III
41. நடராச தேசிகர்
42. அண்ணாமலை தேசிகர் II
43. பொன்னம்பல தேசிகர் III
44. ஆறுமுக தேசிகர் V
45. அருணாசல தேசிகர் II
46. பொன்னம்பல தேசிக பரமாசாரிய சுவாமிகள்

உ

*செந்திலாதிபன் துணை*

# அருணையாதீனக் குருபரம்பரை அகவல்

## அகச்சந்தான குரவர்கள்

ஓங்கி உயர்ந்த உயர்பெருங் கைலையில்
உமையொரு பாகன் இனித மர்ந்துலக
உயிரெலாந் தழைக்க ஒப்பிலாக் கருணை
புரிந்தே சிவஞான போதந் தன்னை
நந்தியெம் பெருமான் றனக்கே உரைசெய
சனற்கு மார முனிவரும் கேட்டே
சத்ய ஞான தரிசனிக் கருள
அப்பெரு மானும் அகமகிழ்ந் தருளி
பரஞ்சோதி முனிவர் தமக்குப் பகர
பாங்குடன் அதனைப் பரிவாய்க் கேட்டுப்
பொதிய மலைதனில் பொலிந்திடு குருமுனி
தன்னைக் காணத் தனிப்பே ராவல்
கொண்டே குவலயம் உய்ய இரங்கி

## புறச்சந்தான குரவர்கள்

வந்தருள் காலை வெண்ணையம் பதியில்
உயர்ந்திடு மாளிகை மேல்முன் றதனில்
பெண்ணா கடந்தனில் உதித்த நற்குணன்
அச்சுதக் களப்பாள ராமெனும் வேளாண்
குலத்தின் திலகர் திருமுறை காட்டிய
வழியில் நின்றதால் பெற்ற நற்றவத்
தனிப்பெ ருந்தவக் கொழுந்தாம் குழந்தை
வெண்கா டரெனும் விளங்குநா மத்துடன்
விளையாட் டயர்தல் கண்டே யவர்தம்
பக்குவ மறிந்து தீக்கைகள் செய்து
மெய்கண் டாரெனும் நற்றிரு நாமம்
சாத்திச் சிவஞான போதந் தன்னை
உரைத்தே உலகிற்கு உபகரித் தனனே
பொய்கண் டகன்ற மெய்கண்ட தேவரும்

சிவஞான போதச் சாத்திரம் தன்னை
தமிழ்நா டுய்யச் சிவநெறிப் பயிர்தான்
செழித்தே ஓங்கச் செய்தே அளித்தான்
மெய்கண் டாரது மெய்மைச் சீடராம்
அருணந்தி சிவத்தின் அடிமலர் சார்ந்து
சிவஞான போதச் சாத்திரந் தன்னை
நாற்பது சீடர்கள் நலமுடன் கேட்டனர்

## அருணையாதீன ஆதிகுருமூர்த்தி

அத்தகு சீடருள் அருணையா தீனத்(து)
அருமைக் குருமுனி தெய்வசி காமணி
சிறந்தோ ராவார் சிறந்தோ ராவார்
ஆரூர் சென்று பிறந்தால் முத்தி
காசியம் பதியில் இறந்தால் முத்தி
தில்லை சென்று கண்டால் முத்தி
அண்ணா மலையாம் அருமைப் பதியை
நினைத்தால் முத்தி நினைத்தால் முத்தி
திருமால் முதலாத் தேவர்கள் தமக்கும்
மாபெருந் தேவன் யானே என்ன
பன்றியும் அன்னமும் ஆய்ப்பறந்த தேடியும்
அக்கினிப் பிழம்பாய் அடிமுடி காணா
நிலைமையாய் நின்றே அருளினான் ஆண்டவன்
சிவபரத் துவமே செப்பிடும் அப்பதி
அப்பதி தன்னில் ஆதி சைவ
மரபினில் சிறந்த மாண்புடைப் பெரியோன்
அருச்சனை புரிய ஆலயத் தினுக்குச்
சென்ற பொழுது சிவனருள் தன்னால்
கொடிமரத் தடியே கோதிலாக் குழந்தை
தன்னைக் கண்டான் தன்மடி எடுத்து
அருணா சலனருள் அருமைக் குழந்தையை
எடுத்தே சென்று ஏற்ற முறநல்
விதிமுறை தன்னால் வளர்த்தே நாளும்
சோடசக் கிரியைகள் முறையுடன் செய்து

தக்க பருவம் சேர்ந்த பொழுதில்
அருமைத் தந்தை அருணா சலத்தை
அர்ச்சித் திடவே செல்லும் பொழுதில்
தானும் அவருடன் சென்றிட ஆலயக்
கொடிமரத் தருகே சென்றிடும் போதினில்
கொடிமரம் மின்ன அண்ணா மலையார்
இடபா ரூடராய்த் தோன்றியே மறைந்தார்
குருமணி யாக எழுந்தே யருளினார்
தெய்வசி காமணி, திருவடி யதனில்
வீழ்ந்தே வணங்கி விம்மிதம் கொண்டு
ஆடினார் அழுதார் அரற்றியே தொழுதார்
அன்பனே அருள்நந்தி யையடை வாயென்று
இறைவன் மறைந்தார்! சிகாமணி திகைத்தார்
அப்பொழு தவணே தந்தையும் வந்து
மைந்தரைக் கண்டு அழைத்திட அவரும்
அருளே வடிவாய் இருந்தகா ரணத்தால்
தந்தை யுடன்செல மறுத்தார் சிகாமணி
அருள்துறை யூரை அடைந்தே அங்கருள்
நந்தி சிவத்தின் அடியை அடைந்திட
ஆண்டவன் முன்பே அருள்நந்தி யாரிடம்
என்னுடை அன்பன் இனிதே வருகிறான்
அன்னவன் றனக்குத் தீக்கைகள் புரிந்து
சிவஞான போதம் செப்புக என்றே
சொல்லிய வாறே அருள்நந்தி தானும்
தீக்கைகள் புரிந்து சிவஞான போதம்
செப்பிடப் பெற்றே வரமொன்று கேட்க
அவ்வரம் தானும் ஏதேன வினவ
இறைவனே சுயம்புவாய் என்னுடைப் பூசைப்
பெட்டகந் தன்னில் அமர்ந்திட அருள
வேண்டும் என்னத் திருவருள் வியந்து
காளத்தி செல்லக் கட்டளை இடவே
காளத்தி சென்று கோவிலி னருகே
புற்றிடம் இருந்தருள் காளத்தி யப்பரைக்

கண்டே களிப்புடன் கொண்டே அண்ணாமலை
நகர்தனை அடைந்து நாளும் நியமமாய்ப்
பூசனை பலவும் செய்தே மகிழ்ந்தனர்
ஒருநாள் அரசன் பவனி வந்தான்
பட்டப் புரவி பதறி விழுந்தது
உயிரை விட்டது உலகோர் கலங்கினர்
தெய்வசி காமணி யாம்குரு மணியிடம்
மன்னவன் வந்து பணிந்தே முறையிட
திருநீ றதனைத் திருக்கரத் தாலே
எடுத்தே புரவியின் நெற்றியில் அணிய
குதிரை தானும் குதித்தே எழுந்திடக்
கண்டோ ரெல்லாம் களித்தே துதித்தனர்
விண்ணவர் மண்ணவர் வியந்தே நின்றனர்
இத்தகை சித்துகள் பலப்பல செய்து
சிவஞான போதச் செம்பொருள் தன்னைத்
தலைமைச் சீடராம் தாண்டவ ராயர்
தமக்கே அருளினர் தமக்கே அருளினர்

## இரண்டு முதல் பதினாறு பட்டம் வரை இருந்தருள் குருமுனிவர்கள்

தாண்டவ ராயர் தலைமை அமர்ந்தனர்
வினைதீர்த் தாரும் பின்னே வந்தனர்
கனக சபாபதி வேலப்ப தேசிகர்
சுப்பிர மணியர் உருத்திர கோடி
சதாசி வர்கண் ணப்ப தேசிகர்
மாசி லாமணி சந்திர சேகரர்
குமர குருபரர் அம்பல வாணர்
அருண கிரிகுரு கந்தப்ப தேசிகர்
சுவாமி நாதனாம் குருபரர் வந்தபின்

## 17–வது பட்டம் முதல் 30–வது பட்டம் வரை பிரான்மலை வந்த குருமூர்த்திகள்

நாக லிங்கமாம் நற்குரு வந்தனர்
அக்குரு மூர்த்தி அருள்விளை யாடல்
பலப்பல செய்து பலதல யாத்திரை

செய்தருள் காலைப் பாண்டிநா டடைய
சேது பதியும் சிறப்புகள் செய்து
இத்திரு நாட்டில் எழுந்தே யருளி
எங்களை யாட்கொள வேண்டும் என்ன
அவ்வா றதனுக் கிசைந்தே நாக
லிங்கரும் பிரான்மலை எனுந்திருத் தலத்தில்
மடாலயம் தாபித்து மகிழ்ந்தே இருந்தனர்
அக்குரு மூர்த்தியின் பின்னே குமர
சாமிதே சிகரே திருச்சிற்றம் பலவர்
சிதம்பர நாதர் சிவக்கொழுந் தீசர்

நமச்சி வாயர் அகத்தீச் சுவரர்
பொன்னம் பலவர் ஏகாம் பரர்
வைத்திய நாதர் அண்ணா மலையார்
ஞானப்ர காசர் ஆறுமுக தேசிகர்
இரண்டாம் திருச்சிற் றம்பல மாமுனி

## 31–வது பட்டம் முதல் தற்காலம் வரை குன்றக்குடி வந்த குருமுனிவர்கள்

மருத நாத மாண்பார் தேசிகர்
இரண்டாம் தாண்டவ ராய தேசிகர்
சிவசுப்ர மண்ய சீரார் தேசிகர்
சாம்ப சிவரே இரண்டாம் ஆறுமுகர்
அருணா சலதே சிகரே இரண்டாம்

பொன்னம் பலவர் மூன்றாம் ஆறுமுக
தேசிகர் இன்பமாய் குன்றக் குடியில்
மடாலயம் மாண்புறத் தாபித் தருளினர்
நான்காம் ஆறுமுக நற்குரு மூர்த்தி
மூன்றாம் தாண்டவ ராய மூர்த்தி
நடராச தேசிகர் இரண்டாம் அண்ணா
மலைதே சிகரே மூன்றாம் பொன்னம்
பலதே சிகர்பின் ஐந்தாம் ஆறுமுக
அருட்குரு மூர்த்தி அரசாண் டதற்பின்
நாற்பத் தைந்தாம் நற்குரு மூர்த்தியாய்

அருணா சலமாம் அருமைநா மத்துடன்
குன்றக் குடியில் குலவிடும் அடிகளார்
என்றே தமிழகம் இயம்பி மகிழ்ந்த
ஏத்திப் புகழ இருந்தருள் புரியும்
நற்றிரு மூர்த்தியின் நற்றிரு வடியை
நாளும் அடிமை ஏத்தித் தொழுவேன்

## அருணையாதீன மரபுவிளக்கம்
### (பூப்பிள்ளை முதல் சின்னப் பட்டம் வரை)

அருணை யாதீன அருஞ்சிறப் பதனை
எளியேன் கூற எம்மான் முருகன்
அருளை வேண்டி அறையலுற் றேன்யான்
திருமடத் தினைமுதல் அணுகிய அடியவர்
பூப்பிள்ளை எனவே பொலிவர் முன்னே
இத்தகு தொண்டினால் அமைந்தநல் லடியவர்
ஓரீராண் டினில் மடாலயத் துள்ளே
பலப்பல பணிகள் செய்தே உயர்ந்து
தவசிப் பிள்ளை எனவே திகழ்வர்
தவசிப் பிள்ளையாய் அமைந்தநல் லடியவர்
இல்லறம் தன்னில் இருந்து கொண்டே
சமய விசேட தீக்கைகள் முதலாய்
குருமூர்த் தியிடம் பெற்றே மகிழ்ந்தே
வழிவழி யாக ஆதி னத்தின்
ஆதர வாளராய் அருமைச் சீடராய்
இருந்தே அரும்பணி பலப்பல செய்வர்
தவசிப் பிள்ளையாய் இருந்திடும் அடியருள்
இல்லறம் புகாமல் தவநெறி தன்னில்
தன்னைச் செலுத்தும் தியாகத் துடனே
தியாகம் விளக்கும் சிவந்தநல் லாடை
பெற்றே துவக்கம் செய்யும் அடியவர்
குட்டி என்றே அழைக்கப் பெறுவர்
குட்டி யாகக் குலவிடும் அடியவர்
அநுபவம் பெறவே அவனியில் சுற்றிட
ஆசான் அருள்பெற்று வெளியே கிளம்புவர்

பரதேசம் சுற்றுமப் பரம னடியரைப்
பரதேசி எனவே பட்டம் சூட்டுவர்
பலப்பல தேசம் சென்றே நாளும்
தவத்தின் மகிமையால் தன்னை உயர்த்தி
ஆசான் அருளை எங்கும் பரப்பி
பாதகா ணிக்கை பலப்பல பெற்று
அதனைத்தன் உடைமையாய் அணுவேணும் கருதாது
அப்பொருள் தன்னில் தான்மயங் காதே
உடற்பிணி தீர்க்கும் மருத்துவப் பணியும்
அறியாமை நீக்கும் அறிவீப் பணியும்

பவப்பிணி போக்கும் பதிபசு பாச
நல்வி ளக்கமும் நாளும் தந்து
மூவாண் டல்லது ஆறாண்டு காறும்
வெளியில் சுற்றி விமலனருல் பெற்று
மடாலயந் தன்னை மாண்புடன் அடைந்து
பெற்ற பொருளைக் குருமுர்த்தி அடிக்கே
சாத்தி மகிழும் அப்பெரு மவர்க்குப்
பரதேசி முத்திரை எனும்மரி யாதை
தந்தே சிலநாள் வைத்தே மகிழ்வர்
அத்தகு அதிகார போதையில் மூழ்காது.

தம்பிரான் அடியராய்த் திகழ்ந்திடும் அடியரைத்
தம்பிரான் எனவே நாமம் சாற்றுவர்
தம்பிரா னாகிச் சிலநாட் சென்றபின்
பெரிய பூசைத் தம்பிரா னென்னும்
தகுதியும் மகிழ்ந்தே நாளும் அடைவர்
சிவபூசை செய்யும் சிறந்தபே றதனால்
ஆணவம் எல்லாம் ஒடுங்கி ஆசான்
திருவடி தன்னில் தன்மனம் ஒடுங்கும்
நிலைகைப் பெற்றோர் ஒடுக்கத் தம்பிரான்
என்னும் உயரிய பெயரை அடைவர்.

ஆசான் றனது அருமைச் சார்பினால்
சார்ந்ததன் வண்ணம் ஆகிய நிலையில்
ஆசானுக் குரிய அடையாளம் யாவும்
தன்னிடம் தோன்றிச் சிறப்பே உற்ற

பெருமக னாரைப் பெரிதும் போற்றி
ஆசான் அடையாளம் அமையப் பெற்றவர்
என்னும் பொருள்தரு சின்னப் பட்டம்
எனும்சிறப் புடனே இருந்த பின்பு
ஆசான் ஆகவே இருந்தருள் புரிவர்.

## அருணையாதீனத் திருப்பணிகள்
### சமய சமுதாயப் பணி

நந்தமிழ் நாட்டின் நற்றிரு நகராம்
சென்னையம் பதியினில் இரண்டு மடங்கள்
இருந்தே பணிசெய்த பெருந்திறல் படைத்து
நம்மா தீனம் நம்மா தீனம்
பிரான்மலை தன்னில் இருந்திடும் பச்சிலை
பலப்பல கொண்டு சென்னையம் பதியில்
வாழ்ந்திடு ஏழை மக்களின் நோயை
நீக்கிய பெருமை உடையவா தீனம்
கல்விப் பயிர்தான் தழைக்கச் சென்னையில்
நாட்டுப் பிள்ளையார் கோவில் மடத்தில்
பலப்பல மாணவர் பயிலச் செய்தது
கடற்கரை வாழ்மக்கள் கடவுட் கொள்கையில்
நிலைபெற வேண்டிக் கடற்கரை தன்னில்
முதன்முத லாகச் சமயப் பணிகள்
செய்தவா தீனம் நம்மா தீனம்

### சமய சாத்திர தோத்திரப்பணி

சித்தியார் சுபக்க உரைதனை இயற்றியும்
பெரிய புராணப் பதவுரை இயற்றியும்
வடமொழி தன்னிலும் பலப்பல நூல்கள்
இயற்றிப் பணிசெய்த எம்மா தீனம்

### தமிழ்ப்பணி

மருத பாண்டியன் அவைக்களத் திருந்த
நாற்பது நற்றமிழ்ப் புலவர்சிங் கங்களும்

அருணை யாதீனத் தருந்தமிழ்ச் சீடர்கள்
குன்றக் குடிதன் குறவஞ் சிதனை
இனிமையாய் இயற்றிய இன்றமிழ்ப் புலவரும்
மயூரகிரிக் கோவை கொடுத்தநற் புலவரும்
போன்றமா ணாக்கர் பலப்பலர் தமக்கு
சங்கர லிங்க முனிவராம் பெரியோர்
தமிழ் போதித்த தனிப்பே ராதீனம்
ஆறு முகநா வலர்தமை அழைத்து
செந்தமிழ் தமக்கே சிவிக்கை உரியது
என்றே சிவிகையில் ஏறி வலமே
செய்தவா தீனம் நம்மா தீனம்
சென்னையம் பதியில் முதன்முத லாக
தமிழேடு தேடிச் சென்ற ஐயருக்கு
தமிழே டிருக்கும் தனிப்பெரும் இடங்களை
காட்டிய பெருமை கொண்டவா தீனம்
சிலப்பதி காரச் செந்தமிழ் ஏட்டை
பிழையிலா துயர்ந்த பெருந்தமிழ் ஏட்டை
உ.வே. சாவிடம் உபகரித் திட்டே
தமிழகத் திற்சிலம் பையொலிக் கச்செய்யும்
ஆதீ னம்மா தீனம் ஆகும்.

## மருத்துவப் பணி

பிரான்மலை தன்னில் உள்ளபச் சிலைகளின்
குணங்களை ஆய்ந்து கோதிலா வைத்திய
முறைகளில் மருந்துகள் பலப்பல செய்து
மயிலை மடத்திலும் மாண்பார் குன்றக்
குடிதனி லுறையும் மக்கள் பலர்க்கும்
தேடிவரும் பற்பல ஏழைகள் தமக்கும்
மருத்துவ உதவி செய்தவா தீனம்

## இசைப்பணி

இரட்டைப் பல்லவி முதலிய பட்டம்
பெற்ற நல்லிசைப் புலவர்கள் பலரையும்

அழைத்தே மரியாதை செய்தவா தீனம்
பொன்னம் பலதே சிகரெனும் குருமணி
வீணையைத் தானே பயின்று கையினில்
இசையுடன் பாடி இசைத்தமிழ் வளர்த்ததை
இன்னும் மறந்திரார் இத்தமி ழகத்தோர்

## ஆலயப்பணி

குன்றக் குடியே கோதில் பிரான்மலை
திருப்புத் தூரோடு திருக்கோளக் குடியும்
தேனாட்சி யம்மை இருந்தருள் கோயிலும்
மட்டியூர் முதலிய மாண்பெருங் கோயிலும்
பலப்பல சிறப்புறச் செய்யுமா தீனம்

## அருணாசல தேசிக பரமாசாரிய மூர்த்தி

திருவரு ணாசலத் தேசிக னாம்மணி
பெருவரம் நல்கிடும் பெருமைசால் குரும்ணி
சைவப் பயிர்தான் தழைத்திட நாளும்
பைந்தமிழ்க் கொண்டல் பெய்திடு தமிழ்மணி
கல்விப் பயிர்தான் கதித்தே ஓங்கிட
பலவிதப் பள்ளி நிறுவிடும் கொடைமணி
அருள்நெறி தன்னை அவணியில் பரப்பிட
ஒருநெறி கண்ட ஒப்பிலா அருள்மணி
திருமுறை தன்னைத் தினமும் கேட்டு
அழுது அழுது அரற்றும் அருமணி
காளத்தி யப்பரைக் கரைந்தே நாளும்
சிவபூ சனையே செய்திடு செம்மணி
தமிழ்மறை தன்னால் தலைவனைப் போற்றிட
தடைசொல் வோரைத் தடுத்து நிறுத்தும்
பேருளங் கொண்ட பேரருட் டிருமணி
நடராச தேசிக நற்குரு மூர்த்தியை
சின்னப் பட்டமாய் அமர்த்திய தலைமணி
சைவ சிகாமணி தெய்வசிகா மணியே

*முருகா*

“ அருள்ஞானப் பண்ணையாக, தொண்டின் உறைவிடமாக விளங்கும் நம் குன்றக்குடித் திருவண்ணாமலை ஆதீனக்குருமுதல்வர் திருவருள்திரு தெய்வசிகாமணி தேசிக சுவாமிகள் அவர்களை அருள்திரு குமாரசாமி முனிவர் செந்தமிழ்ப் பாமாலையால் போற்றியுள்ளார்.

குன்றக்குடித் திருவண்ணாமலை ஆதீனத்தின் குருமகா சந்நிதானங்களும், தம்பிரான்களும் சிவஞானானுபவச் செந்தமிழ்ச் சீலமும், கேடும் ஆக்கமும் கெட்டதிருவும், ஓடும் செம்பொன்னும் ஒக்கவே நோக்கும் வித்தகத் துறவும் வழிவழியாய் உடையவர்கள்.

தேன் நிறைந்த மலர்களை இணைத்தால் இறைவனின் திருவடிக்கு மாலையாகும். சிவஞானத் தேன் ததும்பும் செந்தமிழ்ப்பாக்களை இணைத்து, ‘தெய்வ சிகாமணி நான்மணிமாலை’ என்னும் ஆரத்தை, அருள்திரு குமாரசாமி முனிவர், நம் குரு முதல்வருக்கு அளித்துள்ளார்.”

46வது குருமகா சந்நிதானம்,

**திருவருள்திரு தெய்வசிகாமணி**

**பொன்னம்பல தேசிக பரமாசாரிய சுவாமிகள்**

உ

சிவ சிவ

சைவப்பேரன்பர்கள்,

தேன்மணி மாலையாம் இந்நான்மணி மாலையை ஓதியுணர்ந்து, அறம், பொருள், இன்பம் என்னும் இம்மைப் பயன்களையும், வீடுபேறு என்னும், மறுமைப் பயனையும் அடைய, நம்பெருமான் ஸ்ரீ காளத்திநாதனின் திருவடி மலர்களை வேண்டுகிறேன்.



குன்றக்குடி-திருவண்ணாமலை ஆதீனத்து அடியவன்

சிவத்திரு ப. மூக்கப்பிள்ளை

உணவு, வாழ்வுப்பொருள் வாணிகம்,

285, பெரியகடைத்தெரு, திருச்சி - 620 008.

ஜோதி பிரிண்டர்ஸ், சின்னக்கடை வீதி, திருச்சி-2. போன் : 25416.